## மார்க்கத்தின் எச்சரிக்கை!

அன்புடையீர்! அஸ்ஸலாமு அலைக்கும். இந்த இணைய தளத்தில் உள்ளவைகளைப் பிரச்சாரம் செய்வதற்காகப் பயன்படுத்திக் கொள்ளலாம். ஆனால் சில சகோதரர்கள் நமது ஆக்கங்களை அப்படியே பயன்படுத்தி தமது ஆக்கம் போல் காட்டுகின்றனர்.

இன்னாருடைய கட்டுரையில் இருந்து, அல்லது புத்தகத்தில் இருந்து இது எடுக்கப்பபட்டது என்று குறிப்பிடாமல் புகழடைவதற்காக இவ்வாறு செய்கின்றனர்.

சில இணைய தளங்களும் என்னுடைய ஆக்கங்களை அப்படியே வெளியிட்டு தம்முடைய ஆக்கம் போல் காட்டுகின்றன.மேலும் சில புத்தக வியாபாரிகளும் எனது நூல் உட்பட மற்றவர்களின் நூல்களைச் சிறிது மாற்றியமைத்து அனாமதேயங்களின் பெயர்களில் வெளியிட்டுச் சம்பாதிக்கின்றனர். உலகைப் பற்றியும் இவர்களுக்கு வெட்கம் இல்லை. மறுமையைப் பற்றியும் பயம் இல்லை.

இஸ்லாத்தில் இவ்வாறு செய்ய அனுமதி இல்லை. இவர்கள் நல்லது செய்யப் போய் மறுமையின் தண்டனைக்கு தம்மைத் தாமே உட்படுத்திக் கொள்கின்றனர்.

பிறரது ஆக்கங்களைப் பயன்படுத்துவோர் இது இன்னாருடைய ஆக்கம் என்று குறிப்பிடாமல் தன்னுடைய ஆக்கம் போல் காட்டுவது மார்க்க அடிப்படையில் குற்றமாகும்.

இவர்களுக்கு அல்லாஹ் விடுக்கும் எச்சரிக்கையை இங்கே சுட்டிக் காட்டுகிறோம்.

தாங்கள் செய்தவற்றுக்காக மகிழ்ச்சியடைந்து, தாம் செய்யாதவற்றுக்காகப் புகழப்பட வேண்டுமென விரும்புவோர் வேதனையிலிருந்து தப்பித்து விட்டார்கள் என்று நீர் நினைக்காதீர்! அவர்களுக்குத் துன்புறுத்தும் வேதனை உள்ளது.

திருக்குர்ஆன் 3:188

## ஸுப்ஹான மவ்லிது

தமிழக முஸ்லிம்களில் பெரும்பாலோர் மவ்லிதுகள் எனும் பாடல்களைப் புனிதமான வணக்கமாக எண்ணி ஓதி வருகின்றனர். இஸ்லாத்தின் மிக முக்கியக் கடமைகளான தொழுகை, நோன்பு, ஸகாத், ஹஜ் ஆகிய கடமைகளை நிறைவேற்றாதவர்கள் கூட இந்த மவ்லிதுகளைப் பாடுவதை மட்டும் விடாப்பிடியாக நிறைவேற்றி வருவதிலிருந்து மவ்லிதுகளுக்கு எந்த அளவுக்கு முக்கியத்துவம் தரப்படுகிறது என்பதை நாம் அறியலாம்.

நபிகள் நாயகம் ஸல் அவர்களின் பெயரால் ஸுப்ஹான மவ்லிது, பர்ஸஞ்சி மவ்லிது, புர்தா போன்ற பாடல்கள், நபிகள் நாயகம் ஸல் அவர்களின் பேரர்கள் ஹஸன், ஹுஸைன் ஆகியோர் பெயரால் மவ்லிதுகள், அப்துல் காதிர் ஜிலானி என்பவரின் பெயரால் முஹ்யித்தீன் மவ்லிது, யாகுத்பா, நாகூர் ஷாகுல் ஹமீது என்பவரின் பெயராலும், அந்தந்த ஊரில் அடக்கம் செய்யப்பட்டவர்களின் பெயராலும் வகை வகையான மவ்லிதுகள் உலா வருகின்றன.

எல்லா மவ்லிதுகளுமே பொய்யும் புரட்டும் நிறைந்ததாகவும், இஸ்லாத்தின் அடிப்படையைத் தகர்க்கக் கூடியதாகவும் உள்ளன. அவற்றுள் முதலிடத்தைப் பெற்றுள்ள ஸுப்ஹான மவ்லிது எவ்வாறு அபத்தக் களஞ்சியமாக அமைந்துள்ளது என்பதையும், திருக்குர்ஆனுக்கும், நபிமொழிகளுக்கும் எந்த அளவு முரணாக அமைந்துள்ளது என்பதையும் கீழ்க்காணும் தலைப்புகளில் இந்நூல் விரிவாக அலசுகிறது

ஸுப்ஹான மவ்லிது மவ்லிதின் தோற்றம்

மவ்லிதின் பிறப்பிடம்

எழுதியவர் யார்?

நபியைப் புகழுதல்

மவ்லிது ஏற்படுத்திய தீய விளைவுகள்

அ. குர்ஆனை இழிவுபடுத்தும் போக்கு

ஆ. தொழுகையை விட மவ்லிதை மேலானதாகக் கருதும் நிலை.

இ. பள்ளிவாசலின் புனிதம் கெடுதல்

ஈ. பிறமதக் கலாச்சார ஊடுருவல்

உ. பிறருக்கு இடையூறு செய்தல்

ஊ. ஒழுக்கக் கேடுகளை ஏற்படுத்துவது

எ. பெருமையும், ஆடம்பரமும்

நோய் நிவாரணம் தருவது நபிகள் நாயகமா?

உணவளிக்கும் அதிகாரம் நபிகள் நாயகத்துக்கு உண்டா?

வானவர்கள் மீது அவதூறு பொய்யும் புரட்டும் அபத்தங்கள்

## மவ்லிதின் தோற்றம்

எந்த ஒரு காரியமும் வணக்கமாகக் கருதப்பட வேண்டுமானால் - அதைச் செய்வதால் மறுமையில் ஏதேனும் நன்மை கிடைக்கும் என்று நம்ப வேண்டுமானால் - அந்தக் காரியம் நபிகள் நாயகம் ஸல் அவர்களால் கற்றுத்தரப்பட்டிருக்க வேண்டும். அல்லது அவர்கள் முன்னிலையில் அக்காரியம் நிகழ்ந்து அதை அவர்கள் அங்கீகரித்திருக்க வேண்டும். அவ்வாறு இல்லாத எந்தக் காரியமும் ஒரு வணக்கமாக - மறுமையில் நன்மையளிப்பதாக ஆக முடியாது. இது இஸ்லாத்தின் அடிப்படை விதி.

இந்த விதியைப் புரிந்து கொள்வதற்கு மிகப் பெரிய ஆராய்ச்சி ஏதும் தேவையில்லை நபிகள் நாயகம் ஸல் அவர்களைத் தனது இறுதித் தூதராக அல்லாஹ் அனுப்பி வைத்தான். அவர்கள் வழியாக முஸ்லிம்கள் செய்ய வேண்டிய அனைத்து வணக்கங்களையும் கற்றுத் தந்தான். அவர்களுக்குப் பின் எவருக்கும் வஹீ - இறைச் செய்தி - வர முடியாது என்ற அடிப்படைக் கொள்கையை விளங்கியிருந்தால் போதும். இந்த விதியைப் புரிந்து கொள்ள முடியும்.

நபிகள் நாயகம் ஸல் அவர்களுக்குப் பின் ஒரு வணக்கத்தை மற்றவர்களும் உருவாக்கலாம் என்று யாரேனும் கருதினால் நபிகள் நாயகம் ஸல் அவர்கள் வணக்கங்களை முழுமையாகக் கற்றுத் தரவில்லை என்று அவர் கருதுகிறார். நபிகள் நாயகம் ஸல் அவர்களுக்குப் பின் மற்றவர்களுக்கும் வஹீ வரக்கூடும் என்றும் அவர் கருதியவராகிறார்.

இன்றைய தினம் உங்கள் மார்க்கத்தை உங்களுக்காக நிறைவு செய்து விட்டேன். எனது அருளை உங்களுக்கு முழுமைப்படுத்தி விட்டேன். இஸ்லாத்தை உங்களுக்கான வாழ்க்கை நெறியாகப் பொருந்திக் கொண்டேன்.

அல்குர்ஆன் 5:3

நபிகள் நாயகம் ஸல் அவர்கள் இவ்வுலகில் வாழும் போதே இம்மார்க்கத்தை முழுமைப்படுத்தி விட்டதாக அல்லாஹ் மேற்கண்ட வசனத்தில் கூறுகின்றான்.

மார்க்கம் முழுமைப்படுத்தப்பட்டு விட்டது என்றால் என்ன பொருள்? அல்லாஹ்வே முழுமைப்படுத்தி விட்டான் என்று கூறினால் அதற்கு என்ன பொருள்?

மார்க்கத்தில் எவையெல்லாம் உள்ளனவோ அவை ஒவ்வொன்றையும் நான் கூறி விட்டேன்; புதிதாக எதையும் உருவாக்கிட அவசியமில்லை; அது கூடாது என்பதைத் தவிர இதற்கு வேறு பொருள் இருக்க முடியாது.

நபிகள் நாயகம் ஸல் காலத்தில் இந்த மவ்லிதுகள் இருக்கவில்லை; அல்லாஹ்வால் நேரடியாக முழுமைப்படுத்தப்பட்ட மார்க்கத்தில் மவ்லிதுகள் இருக்கவில்லை என்பதே மவ்லிதுகளை நிராகரிக்கப் போதுமான காரணமாகவுள்ளது.

நமது உத்தரவின்றி யாரேனும் ஒரு அமலைச் செய்தால் அது நிராகரிக்கப்படும் என நபிகள் நாயகம் ஸல் கூறினார்கள்.

அறிவிப்பவர்: ஆயிஷா ரலி),

நூல்: முஸ்லிம் 3243

நமது இந்த மார்க்கத்தில் இல்லாத ஒன்றை யாரேனும் உருவாக்கினால் அது நிராகரிக்கப்படும் எனவும் நபிகள் நாயகம் ஸல் கூறினார்கள்.

அறிவிப்பவர்: ஆயிஷாரலி),

நூல்கள்: புகாரி 2697, முஸ்லிம் 3242.

மேற்கண்ட இரண்டு நபிமொழிகளும் கூறுவது என்ன?

நாம் எந்த ஒரு அமலை நல்லறத்தைச் செய்வதாக இருந்தாலும் அது பற்றி நபிகள் நாயகம் ஸல் அவர்கள் ஏதும் கட்டளை பிறப்பித் திருக்கிறார்களா என்று பார்க்க வேண்டும். அவர்களது கட்டளையில்லாமல் எந்த ஒரு அமலைச் செய்தாலும் அது அல்லாஹ்வால் நிராகரிக்கப்படும் என்பதைத் தான் மேற்கண்ட நபிமொழிகள் கூறுகின்றன.

மவ்லிது ஓதுமாறு நபிகள் நாயகம் ஸல் அவர்கள் எந்தக் கட்டளையும் பிறப்பிக்காதது மவ்லிதை நிராகரிக்க மற்றொரு காரணமாக அமைகின்றது.

செய்திகளில் சிறந்தது அல்லாஹ்வின் வேதமாகும். வழிகளில் சிறந்தது முஹம்மதுடைய வழியாகும். மார்க்கத்தில் புதிதாக உருவாக்கப்பட்டவை காரியங்களில் மிகவும் கெட்டதாகும். ஒவ்வொரு அனாச்சாரமும் வழிகேடாகும் என்று நபிகள் நாயகம் ஸல் கூறியுள்ளனர்.

அறிவிப்பவர்: ஜாபிர் பின் அப்துல்லாஹ் (ரலி),

நூல்: முஸ்லிம் 1435

செய்திகளில் உண்மையானது அல்லாஹ்வின் வேதமாகும். வழிகளில் அழகியது முஹம்மதின் வழியாகும். மார்க்கத்தில் புதிதாக உருவாக்கப்பட்டவை காரியங்களில் மிகவும் கெட்டதாகும். புதிதாக உருவாக்கப்பட்ட ஒவ்வொன்றும் பித்அத் அனாச்சாரம் ஆகும். ஒவ்வொரு வழிகேடும் நரகத்தில் சேர்க்கும் எனவும் நபிகள் நாயகம் ஸல் கூறியுள்ளனர்.

அறிவிப்பவர்: ஜாபிர் பின் அப்துல்லாஹ் ரலி),

நூல்: நஸயீ 1560

இவ்விரண்டு நபிமொழிகளும் கூறுவது என்னவென்பதை முஸ்லிம்கள் கவனமாகச் சிந்திக்க வேண்டும்.

நபிகள் நாயகம் ஸல் அவர்களுக்குப் பின்னால் புதிதாக உருவாக்கப்பட்டவை

மிகவும் மிகவும் கெட்ட காரியம். வழிகேடு. நரகத்தில் சேர்க்கும்

என்றெல்லாம் கடும் எச்சரிக்கை இதில் உள்ளது. நபிகள் நாயகம் ஸல் காலத்துக்கு ஆயிரம் வருடங்களுக்குப் பிறகு உருவாக்கப்பட்ட இந்த மவ்லிதுகளால் நன்மை ஏதும் விளையாது என்பது ஒருபுறமிருக்க இதனால் நரகத்திற்குச் செல்லும் நிலை தான் ஏற்படும் என்பதில் எந்தச் சந்தேகமும் இல்லை.

அல்லாஹ்வும், நபிகள் நாயகம் ஸல் அவர்களும் மவ்லிது ஓதுமாறு கூறவில்லையென்றால் பிறகு எப்படி மவ்லிது என்பது ஒரு வணக்கமாக முஸ்லிம் சமுதாயத்தில் நிலைபெற்றது?

## மவ்லிதின் பிறப்பிடம்

உலகத்தில் முஸ்லிம்கள் இல்லாத நாடுகளே இல்லை என்ற அளவுக்கு இஸ்லாம் இன்று வளர்ந்துள்ளது. மவ்லிதுகள் மார்க்கத்தில் உள்ளதாக இருந்தால் உலக முஸ்லிம்கள் அனைவரிடமும் மவ்லிது ஓதும் வழக்கம் இருக்க வேண்டும்.

நபிகள் நாயகம் ஸல் அவர்கள் பிறந்த சவூதி அரபியாவிலும் மவ்லிதைப் பாடும் போதே அதன் பொருளை விளங்கிடக் கூடிய மக்கள் வாழும் மற்ற அரபு நாடுகளிலும் மவ்லிதுகள் எதுவுமே இல்லை. இல்லை என்பது மட்டுமல்ல. மவ்லிது நூலுடன் யாரேனும் அரபு நாட்டுக்குள் நுழைந்தால் மவ்லிது நூலைப் பிடுங்கி அங்குள்ள அரசாங்கம் குப்பையில் வீசி விடுகிறது. அதில் அமைந்துள்ள மோசமான கொள்கைகளும், உளறல்களுமே இதற்குக் காரணம்.

அரபு நாடுகளை விட்டு விடுவோம். உலகில் உள்ள வேறு எந்த நாட்டு முஸ்லிம்களாவது இந்த மவ்லிதை ஓதுகிறார்களா? நிச்சயமாக இல்லை. இல்லை என்பது மட்டுமல்ல. மவ்லிதைப் பற்றி நாம் அவர்களிடம் கேட்டால் மவ்லிது என்றால் என்ன? என்று நம்மிடமே அவர்கள் திருப்பிக் கேட்கிறார்கள்.

நமது நாட்டில் கூட கேரளாவிலும் தமிழகத்திலும் வாழும் முஸ்லிம் கள் தான் இந்த மவ்லிதுகளை அறிந்துள்ளனர். வேறு மாநில மக்களுக்கு ஸுப்ஹான மவ்லிது என்றால் என்ன என்பதே தெரியாது.

நமது தமிழக முஸ்லிம்கள் பிழைப்புத் தேடிச் சென்ற இலங்கை, மலேசியா போன்ற நாடுகளிலும் இதை அரங்கேற்றி வருகின்றனர்.

இதிலிருந்து தெரிய வருவது என்ன?

இது மார்க்கத்தில் உள்ளதாக இருந்திருந்தால் உலகின் பல பகுதி களில் வாழும் முஸ்லிம்கள் இதைக் கடைப்பிடித்து ஒழுகியிருப்பார்கள்.

யாரோ சில மார்க்க அறிவு இல்லாதவர்கள் நமது பகுதிகளில் தோன்றி இதைப் பரப்பி விட்டனர். இதற்கும், மார்க்கத்திற்கும் எந்தச் சம்மந்தமும் இல்லை என்பதை இதிலிருந்து அறியலாம்.

## எழுதியவர் யார்?

மவ்லிதின் முகப்பு அட்டையில் இது கஸ்ஸாலி எழுதியது. கதீப் அவர்கள் எழுதியதாகவும் கூறப்பட்டுள்ளது என்று எழுதி வைத்துள்ளனர்.

இவர் தான் எழுதினார் என்று கூட குறிப்பிட எந்தக் குறிப்பும் இல்லை. கஸ்ஸாலியோ,கதீபோ எழுதியிருந்தால் உலகம் முழுவதும் உள்ள அவர்களின் அபிமானிகள் இதை அறிந்திருக்க வேண்டும்.

தாங்களாகவே இதை எழுதிக் கொண்ட சில வழிகேடர்கள் தங்கள் பெயரில் இதைப் பரப்பினால் மக்களிடம் எடுபடாது என்று கருதினார்கள். மக்களிடம் யாருக்கு நல்ல அறிமுகம் உள்ளதோ அவர்கள் பெயரைப் பயன்படுத்துவோம் என்ற திட்டத்துடன் தான் இவ்வாறு குறிப்பிட்டுள்ளனர்.

மேற்கண்ட இருவரது நூல்களின் பட்டியலில் ஸுப்ஹான மவ்லிது என்பது இடம் பெறவே இல்லை. அவர்களே எழுதியிருந்தாலும் அதனால் அது மார்க்கமாக ஆகாது என்பது தனி விஷயம்.

மார்க்கம் முழுமைப்படுத்தப்பட்டு 14 நூற்றாண்டுகள் சென்று விட்டன. இந்த மவ்லிதுகள் சுமார் முன்னூறு ஆண்டுகளாகத்தான் தமிழகம் மற்றும் கேரளாவில் நடைமுறையில் உள்ளது.

நபிகள் நாயகம் ஸல் அவர்களின் காலம் முதல் ஆயிரம் வருடங்கள் வரை வாழ்ந்த நபித்தோழர்கள், தாபியீன்கள், நாற்பெரும் இமாம்கள் உள்ளிட்ட எண்ணற்ற மார்க்க அறிஞர்கள் எவருமே இந்த மவ்லிதுகளைப் பாடியதில்லை. கேள்விப்பட்டதுமில்லை.

சுமார் முன்னூறு ஆண்டுகளுக்கு முன் எழுதப்பட்ட எந்த நூலிலும் இதுபற்றி எந்தக் குறிப்பும் இல்லை. எனவே இது பிற்காலத்தில் கற்பனை செய்து புனையப்பட்டவை என்பதில் எந்தச் சந்தேகமும் இல்லை.

இந்தக் காரணத்துக்காகவே மவ்லிதைத் தூக்கி எறிந்து விட வேண்டும் என்றாலும் இன்னும் ஏராளமான நியாயமான காரணங்கள் உள்ளன.

அவற்றையும் அறிந்து கொண்டால் இந்த மவ்லிதுகளின் பக்கம் எந்த முஸ்லிமும் தலைவைத்துப் படுக்க மாட்டார்.

மவ்லிது அபிமானிகள் மவ்லிதை நியாயப்படுத்திட சில ஆதாரங்களைக் காட்டுவார்கள். அவற்றை அறிந்துவிட்டு மவ்லிதைத் தூக்கி எறிவதற்குரிய காரணங்களை நாம் பார்ப்போம்.

## நபியைப் புகழுதல்

ஸுப்ஹான மவ்லிது என்பது நபிகள் நாயகம் ஸல் அவர்களைப் புகழ்ந்து பாராட்டுவதற்காகத் தான் இயற்றப்பட்டது. அந்த நோக்கத்தில் தான் நாங்களும் பாடுகிறோம். சில நபித்தோழர்கள் புகழ்ந்து கவி பாடியதை நபிகள் நாயகம் ஸல் அவர்களே அங்கீகரித்துள்ளனர். உண்மையான எந்த முஸ்லிமும் நபிகள் நாயகம் ஸல் அவர்களைப் புகழ்வதற்குத் தடை சொல்ல மாட்டான்.

மவ்லிது அபிமானிகள் மவ்லிதை நியாயப்படுத்திடக் கூறும் ஆதாரங்கள் இவை.

நபிகள் நாயகம் ஸல் அவர்களைப் புகழ்வது அல்ல பிரச்சனை.

நமது முழு வாழ்நாளையும் அவர்களைப் புகழ்வதற்காகப் பயன்படுத்தலாம். நல்லொழுக்கம்,வீரம், நேர்மை போன்ற எத்தனையோ நற்குணங்களை நபிகள் நாயகம் ஸல் அவர்கள் பெற்றிருந்தனர். அவற்றையெல்லாம் உலகறிய உரைப்பதில் எந்தத் தவறும் இல்லை.

ஆனால் மவ்லிது இந்தப் பணியைத் தான் செய்கிறதா?

நபிகள் நாயகம் ஸல் அவர்களைப் புகழ்கிறோம் என்று கூறும் இவர்களிடம் போய் என்ன சொல்லிப் புகழ்ந்தீர்கள்? நபிகள் நாயகத்தின் எந்தப் பண்பைப் புகழ்ந்தீர்கள்? என்று கேட்டுப் பாருங்கள்! கூலிக்குப் பாடியவர்களில் பலருக்கும் தெரியாது. அவர்களை அழைத்துப் பாடச் செய்தவர்களுக்கும் தெரியாது.

மவ்லிதைச் செவிமடுத்த மக்கள் நபிகள் நாயகம் ஸல் அவர்களின் எந்தச் சிறப்பை அறிந்து கொண்டனர்? எதுவுமே இல்லை.

புகழுதல் என்ற போர்வையில் ஒரு வணக்கம் தான் நடக்கின்றது.

அல்லாஹ்வின் வேதத்தை அர்த்தம் தெரியாமல் ஓதினாலும் ஒரு எழுத்துக்கு பத்து நன்மைகள் கிடைக்கும் என்று மார்க்கம் கூறுகிறது.

மவ்லிதையும் இது போன்ற நம்பிக்கையில் தான் பாடியும் கேட்டும் வருகின்றனர். யாரோ ஒரு மனிதனின் கற்பனையில் உதித்த சொற்களைப் பொருள்

தெரியாமல் வாசித்தாலும் நன்மை உண்டு என நினைப்பது தான் நபிகள் நாயகம் ஸல் அவர்களைப் புகழுதலா?

சாதாரண மனிதனின் சொற்களை வாசிப்பதால் - கேட்பதால் அங்கே அல்லாஹ்வின் அருள் மாரி இறங்கும் என்று நம்புவதற்குப் பெயர் தான் நபிகள் நாயகம் ஸல் அவர்களைப் புகழுதலா?

இந்தப் பாடலைப் பாடியவுடன் அங்கே வைக்கப்பட்டிருந்த உணவுப் பதார்த்தங்களுக்குத் தனி மகத்துவம் வந்துவிட்டதாக நம்பப்படுகிறதே இதற்குப் பெயர் தான் நபிகள் நாயகம் ஸல் அவர்களைப் புகழுதலா?

புகழுதல் என்பது போர்வை தான். உள்ளே நடப்பது யாவும் புதிதாக உருவாக்கப்பட்ட வணக்கம் தான்.

நபிகள் நாயகம் ஸல் அவர்கள் வாழும் போது அவர்களை பல நபித்தோழர்கள் புகழ்ந்து பாடியுள்ளனர். இதற்கு ஹதீஸ் நூல்களில் ஆதாரம் உள்ளது.

ஆனால் இந்தப் பாடல்களை நபித்தோழர்கள் ஒவ்வொருவரும் ஆளுக்கு ஒரு பிரதி வாங்கி வைத்துக் கொண்டு வீட்டில் ஓதிக் கொண்டிருந்தார்களா?

இப்போதும் கூட ஒருவர் விரும்பினால் நபிகள் நாயகம் ஸல் அவர்களைப் புகழ்ந்து

* மேடையில் பேசலாம்!

* கட்டுரை எழுதலாம்.

* கவிதையும் இயற்றலாம்.

மார்க்கம் வகுத்துள்ள வரம்புக்குள் நின்று இவற்றைச் செய்யலாம். அது போல் மவ்லிது பாடக்கூடியவர்கள் தாங்களாக தினம் ஒரு கவிதையை இயற்றி அதன் பொருளை உணர்ந்து நபிகள் நாயகம் ஸல் அவர்களைப் புகழட்டும்! இதை யாரும் ஆட்சேபிக்க மாட்டார்கள்.

எவரோ புகழ்ந்து பேசியதை, பாடியதை அச்சிட்டு வைத்துக் கொண்டு அதை உருப்போடும் போது தான் அது ஒரு போலி வணக்கமாகவும், மோசடியாகவும் ஆகிவிடுன்றது.

மேலும் நபிகள் நாயகம் ஸல் அவர்களைப் புகழவே இந்த மவ்லிதுகள் என்று இனியும் வாதிட்டார்கள் என்றால் அவர்கள் கூறுவது பொய் என்பதை அவர்களின் நடவடிக்கைகள் நிரூபிக்கின்றன.

நபிகள் நாயகம் ஸல் அவர்களைப் புகழ்வது நோக்கம் என்றால் வீடு வீடாகச் சென்று கூலி பெறுவது ஏன்?

நபிகள் நாயகம் ஸல் அவர்களைப் புகழ்வதற்கான கூலியை மறுமையில் தானே எதிர்பார்க்க வேண்டும்?

விடி மவ்லிது, நடை மவ்லிது என்று கொடுக்கப்படும் தட்சணைகளுக்கு ஏற்ப மவ்லிது விரிவதும், சுருங்குவதும் ஏன்?

பணம் படைத்தவர்களுக்கும், ஏழைகளுக்கும் பாரபட்சம் காட்டுவது தான் நபிகள் நாயகம் ஸல் அவர்களைப் புகழும் இலட்சணமா?

மார்க்க அறிஞர்களுக்கு எந்த வருமானமும் இல்லாத காலத்தில் அன்றைக்கு வாழ்ந்த அறிஞர்கள் இதை வருமானத்திற்காக உருவாக்கினார்கள்.

இதை இன்றைக்கும் நியாயப்படுத்துவது சரிதானா? என்பதை மார்க்க அறிஞர்கள் சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

இல்லாத ஒரு வணக்கத்தை உருவாக்கிய குற்றத்தை மறுமையில் சுமக்க வேண்டுமா என்று எண்ணிப் பார்க்க வேண்டும். புரோகிதர்கள் என்ற இழிவு மார்க்க அறிஞர்களுக்கு ஏற்பட இது தான் காரணம் என்பதை மார்க்க அறிஞர்கள் உணர்ந்தால் அவர்களின் மரியாதையும் உயரும்.

மேலும் நபிகள் நாயகம் ஸல் அவர்களைப் புகழலாம் என்றாலும் அதற்கு ஒரு வரம்பு உள்ளது.

கிறித்தவர்கள் மர்யமுடைய மகன் ஈஸாவை வரம்பு மீறிப் புகழ்ந்தது போல் என்னை வரம்பு மீறிப் புகழாதீர்கள்! அல்லாஹ்வின் தூதர் என்றும் அடியார் என்றும் கூறுங்கள் என்பது நபிமொழி.

அறிவிப்பவர்: இப்னு அப்பாஸ் ரலி

நூல்: புகாரி 3445, 6830

நபிகள் நாயகம் ஸல் அவர்களைப் புகழவே இந்த மவ்லிதுகள் என்பதை ஒரு வாதத்துக்கு ஏற்றுக் கொண்டாலும் நபிகள் நாயகம் ஸல் அவர்கள் காட்டிய இந்த வரம்பை மீறியே புகழ்கிறார்கள். ஸுப்ஹான மவ்லிதில் நபிகள் நாயகம் ஸல் அவர்களை அல்லாஹ்வின் நிலையில் நிறுத்தக் கூடிய பாடல்கள் பல உள்ளன.

அவை பின்னர் விளக்கப்படவுள்ளது

எனவே இந்த வாதத்தின் மூலம் மவ்லிதைத் தூக்கிப் பிடிக்க முடியாது.

மவ்லிதினால் ஏற்பட்ட விளைவுகளின் காரணமாகவும் மவ்லிதை நாம் நிராகரித்தே ஆக வேண்டும்.

## மவ்லிது ஏற்படுத்திய தீய விளைவுகள்

இனி மவ்லிது ஏற்படுத்திய தீய விளைவுகள் சிலவற்றைக் காண்போம்.

- குர்ஆனை இழிவுபடுத்தும் போக்கு

மவ்லிதுகள் வணக்கமாக மாறிவிட்ட பின் ஏற்பட்ட தீய விளைவுகளில் முக்கியமானது அதைக் குர்ஆனுக்குச் சமமாக சில சமயம் குர்ஆனுக்கும் மேலாகக் கருதும் நிலை ஏற்பட்டதாகும்.

அல்லாஹ்வுடைய வேதம் அல்குர்ஆன் வீடுகள் தோறும் இவ்வளவு முக்கியத்துவத்துடன் ஓதப்படுவதில்லை.

மங்கலமான நிகழ்ச்சிகளுக்கு மவ்லிது என்றும் அமங்கலமான நிகழ்ச்சிகளுக்கு குர்ஆன் என்றும் வகைப்படுத்தப்பட்டுள்ளது.

பொருள் தெரியாமல் ஓதினாலும் ஒவ்வொரு எழுத்துக்கும் நன்மை கிடைக்கும் என்ற குர்ஆனுக்குரிய தனித்தகுதி முகவரியற்ற யாரோ ஒரு கவிஞனால் இயற்றப்பட்ட பாட்டுக்கும் வழங்கப்பட்டுள்ளது.

குர்ஆன் எப்படி நோய் நிவாரணம் நாடி ஓதப்படுகிறதோ அவ்வாறே மார்க்க அறிவற்ற மனிதனால் இயற்றப்பட்ட அரபி பாடலைப் பாடி நோய் நிவாரணம் வேண்டப்படுகின்றது.

அல்லாஹ்வின் வார்த்தைக்குச் சமமாகவும், அதற்கு மேலாகவும் மனிதனின் வார்த்தைகள் மதிக்கப்படுவது மவ்லிதினால் ஏற்பட்ட மிக மோசமான விளைவாகும்.

- தொழுகையை விட மவ்லிதை மேலானதாகக் கருதும் நிலை.

இஸ்லாத்தின் மிக முக்கியமான கடமை தொழுகை. மவ்லிதுக்காக இந்தத் தொழுகை இழிவுபடுத்தப்படுவதும் மவ்லிது ஏற்படுத்திய தீய விளைவுகளில் ஒன்றாகும்.

பள்ளிவாசலில் இமாமாகப் பணிபுரியும் சிலர் தொழுகைகளுக்குக் கூட சரியாக வருகை தர மாட்டார்கள். அதற்காக அவர்கள் மீது நடவடிக்கை எடுக்காத பள்ளிவாசல் நிர்வாகிகள் மவ்லிது சபைக்கு வரவில்லையானால் நடவடிக்கை எடுப்பதைக் காண்கிறோம்.

பள்ளிவாசலில் பாங்கு சொல்லப்படும் போது அதன் அருகில் உள்ள வீட்டில் மவ்லிது ஓதப்பட்டுக் கொண்டிருக்கும். மவ்லிது நிறுத்தப்பட மாட்டாது. அதன் பின்னர் பள்ளியில் தொழுகை நடைபெறும். அந்த நேரத்திலும் மவ்லிதுக் கச்சேரி நடந்து கொண்டிருக்கும். மவ்லிது எனும் மிகச் சிறந்த வணக்கத்தை (? நிறைவேற்றிக் கொண்டிருக்கும் போது தொழுகை எல்லாம் பெரிய விஷயமா என்ன?

இப்படி தொழுகையை அலட்சியம் செய்யுமளவுக்கு மவ்லிது வெறி வேரூன்றியுள்ளது.

- பள்ளிவாசலின் புனிதம் கெடுதல்

பள்ளிவாசல்கள் அல்லாஹ்வுக்கே உரியன. எனவே அல்லாஹ்வுடன் வேறு எவரையும் அழைக்காதீர்கள்!

(அல்குர்ஆன் 72:18)

என்று இறைவன் கட்டளையிடுகிறான்.

இந்தக் கட்டளைக்கு மாற்றமாக பள்ளிவாயிலில் நபியே! ரஸூலே! முஹ்யித்தீனே! நாகூராரே! என்றெல்லாம் அழைக்கின்றனர். அவர்களிடம் பிரார்த்திக்கின்றனர். அல்லாஹ்வை அழைத்து உதவி தேடுவதற்காகக் கட்டப்பட்ட அவனுக்குச் சொந்தமான ஆலயத்தில் அவனது கட்டளை அப்பட்டமாக மீறப்படுகின்றது. இதனால் பள்ளிவாயிலின் புனிதம் கெடுகின்றது.

- பிறமதக் கலாச்சார ஊடுருவல்

பூஜையோ, புனஸ்காரமோ செய்த பின் சாதாரணப் பொருட்களும் புனிதப் பொருட்களாக மாறிவிடும் என்பது பிற சமயத்து நம்பிக்கை!

பூஜை நடத்தப்படுவதற்கு முன் சாதாரண சர்க்கரையாக இருந்தது பூஜைக்குப் பின் பிரசாதமாக மாறி விடுகிறது. துளியளவாவது கிடைக்காதா என்று பெரும் செல்வந்தர்களும் போட்டியிடும் அளவுக்கு அதில் என்னவோ இறங்கி விட்டதாக நம்புவது பிற சமயத்து நம்பிக்கை.

மவ்லிது ஓதப்படுவதற்கு முன் சாதாரண பேரீச்சம் பழம் மவ்லிது முடிந்தவுடன் தபர்ருக் (பிரசாதம் என்னும் நிலைக்கு உயர்கிறது. ஒரே ஒரு பேரீச்சம் பழத்தைப் பெறுவதற்காக கோடீஸ்வரர்களும் கியூவில் நிற்கும் நிலை! சாதாரண ஒரு மனிதனின் கவிதையைப் படித்தவுடன் சாதாரணப் பொருளும் பிரசாதமாக மாறிவிடும் என்று நம்புவது ஏகத்துவத்துக்கு எதிரானது அல்லவா? பிறமதத்தவர்களிடமிருந்து காப்பியடிக்கப்பட்டது அல்லவா?

- பிறருக்கு இடையூறு செய்தல்

இஸ்லாமிய வணக்க வழிபாடுகள் அமைதியாகவும், அடுத்தவருக்கு இடையூறு இராத வகையிலும் நிறைவேற்றப்பட்ட வேண்டியவை. இதை மற்றவர்களும் கூட அறிந்து வைத்துள்ளனர்.

மவ்லிது சீசனில் வீடுகளில் ஒலிபெருக்கியை அலறவிட்டு இந்த மவ்லிதுக் கச்சேரியை நடத்துகின்றனர். நபியைப் புகழ்கிறோம் என்ற பெயரில் பரீட்சைக்குப் படிக்கும் மாணவன்,அமைதியைத் தேடும் இதய நோயாளி, உழைத்துக் களைத்து உறங்கும் சராசரி மனிதன் இன்னும் அமைதியை விரும்பும் மக்கள் ஆகியோரின் உறக்கத்தையும், அமைதியையும் கெடுத்து வருவதை நாம் பார்க்கிறோம்.

பிறர் நலம் பற்றி அக்கறைப்படாத மதத்தவர்கள் சில மாதங்களில் இவ்வாறு நடக்கிறார்கள் என்றால் தனது நாவாலும் கையாலும் பிறருக்கு இடையூறு அளிக்காதவனே முஸ்லிம்

புகாரி 10,11,6448 முஸ்லிம் 57,58,59

என்ற நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் கூற்றைப் பேண வேண்டியவர்கள் இப்படி நடக்கலாமா? இவ்வாறு நடக்கச் செய்தது இந்த மவ்லிதுகள் தாம்.

ஒழுக்கக் கேடுகளை ஏற்படுத்துவது

பெண்கள் மாத்திரம் இருக்கும் இடங்களுக்கு அன்னிய ஆண்கள் செல்லக்கூடாது என்பது இஸ்லாத்தின் கட்டளை. எந்த ஒரு ஆணும் அந்நியப் பெண்ணுடன் தனித்திருக்க வேண்டாம் என்று நபிகள் நாயகம் (ஸல்) கூறினார்கள்.

அறிவிப்பவர்: இப்னு அப்பாஸ் (ரலி)

நூல்: புகாரி 3006, 5233.

மவ்லிதைக் காரணம் காட்டி பெண்கள் மட்டும் இருக்கும் வீடுகளுக்கு ஆண்கள் செல்ல முடிகிறது. இப்படிச் செல்வதால் எழுதக் கூசும் சமாச்சாரங்கள் நடப்பதை அடிக்கடி நாம் கேள்விப்படுகிறோம். இதற்காகவே அடித்து உதைத்து ஊரை விட்டு விரட்டப்பட்ட பேஷ் இமாம்களையும் நாம் அறிவோம்.

ஒழுக்கக் கேட்டுக்கு வழி வகுக்கும் இந்த வாசலைத் திறந்து வைத்தால் கெடாதவனும் கெட்டுவிடத் தான் செய்வான்.

- பெருமையும், ஆடம்பரமும்

உன் வீட்டு மவ்லிதை விட என் வீட்டு மவ்லிது பெரியது என்று பெருமையடிக்கும் வகையில் அலங்காரங்கள், மேற்கட்டுகள், மலர் ஜோடனைகள், வண்ண வண்ண விளக்குகள்,காகித வேலைப்பாடுகள் ஆகியவற்றை நாம் காண்கிறோம். நபிகள் நாயகம் (ஸல்) அவர்களால் தடை செய்யப்பட்ட இந்த ஆடம்பரங்களையும் வீண் விரயங்களையும் செய்து நபிகள் நாயகம் (ஸல்)

அவர்களைப் புகழ்கிறார்கள் என்பது அறிவுக்குச் சிறிதளவாவது பொருந்துகிறதா? சிந்தியுங்கள்!

வீண் விரையம் செய்யாதீர்கள்! வீண் விரையம் செய்வோரை அவன் நேசிக்க மாட்டான்.

அல்குர்ஆன் 6:141, 7:31.

விரையம் செய்வோர் ஷைத்தான்களின் உடன்பிறப்புக்களாக உள்ளனர். ஷைத்தான் தனது இறைவனுக்கு நன்றி கெட்டவனாக இருக்கிறான்.

அல்குர்ஆன் 17:27

அவர்கள் செலவிடும் போது விரையம் செய்ய மாட்டார்கள். கஞ்சத்தனமும் செய்ய மாட்டார்கள். அதற்கு இடைப்பட்ட நிலையாகவே அது இருக்கும்.

அல்குர்ஆன் 25:67

இவ்வளவு மோசமான விளைவுகளை இந்த மவ்லிதுகள் சமுதாயத்தில் ஏற்படுத்தி இருப்பதுடன் திருக்குர்ஆனுடனும் நபிவழியுடனும் நேரடியாக மோதக் கூடியதாகவும் அமைந்துள்ளன. ஸுப்ஹான மவ்லிதில் உள்ள சில வரிகளை நாம் ஆராய்ந்தால் இதை உணரலாம்.

## பாவங்களை நபிகள் நாயகம் மன்னிக்க முடியுமா?

كَفِّرُوْا عَنِّيْ ذُنُوْبِيْ  وَاعْفُ لِيْ عَنْ سَيِّئَاتِ

என் பாவங்களை நன்மைகளாக மாற்றுங்கள்!

என் தீமைகளை அலட்சியம் செய்யுங்கள்!

யா நபி (நபியே!) என்று அழைத்துப் பாடப்படும் முதல் பாடலின் சில வரிகள் இவை.

يَا مَنْ تَمَادَى وَاجْتَرَمْ
تُبْ وَاعْتَرِفْ وَارْجُ الْكَرَمْ
وَلُذْ بِمَنْ حَلَّ الْحَرَمْ

குற்றமும் பாவமும் செய்து விட்டவனே!

மன்னிப்புக் கேள்! குற்றத்தை ஒப்புக்கொள். அருளை எதிர்பார்.

சரணடைந்து விடு! (இத்தனையையும் ஹரமில் (மதீனாவில் தங்கியுள்ளவர்களிடம் கேள்!

சல்லூ அலாகைரில் இபாத் என்ற பாடலின் சில வரிகள் இல்லை.

وَاعْطِفْ عَلَيَّ بِعَفْوٍ مِنْكَ يَشْمَلُنِيْ

உங்களின் மன்னிப்பை என் மீது சொரிந்து என் மீது அருள் புரியுங்கள்.

யாஸையிதீ என்ற பாடலின் வரி இது.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களை அல்லாஹ்வின் நிலைக்கு உயர்த்தும் இந்த வரிகளை உண்மை முஸ்லிம்கள் ஏற்க முடியுமா? குர்ஆனையும் நபிவழியையும் மதிக்கக் கூடியவர்கள் இந்த நச்சுக் கருத்தை ஆதரிக்க முடியுமா? பாவங்கள் செய்தோர் அதற்கான மன்னிப்பை இறைவனிடம் தான் பெற வேண்டும். இது இஸ்லாத்தின் அடிப்படைக் கொள்கைகளில் ஒன்றாகும்.

அவர்கள் வெட்கக்கேடானதைச் செய்தாலோ, தமக்குத் தாமே தீங்கு இழைத்துக் கொண்டாலோ அல்லாஹ்வை நினைத்து தமது பாவங்களுக்கு மன்னிப்புத்

தேடுவார்கள். அல்லாஹ்வைத் தவிர பாவங்களை மன்னிப்பவன் யார்? தாங்கள் செய்ததில் தெரிந்து கொண்டே அவர்கள் நிலைத்திருக்க மாட்டார்கள்.

(அல்குர்ஆன் 3:135)

தமக்கு எதிராக வரம்பு மீறிய எனது அடியார்களே! அல்லாஹ்வின் அருளில் நம்பிக்கையிழந்து விடாதீர்கள்! அல்லாஹ் பாவங்கள் அனைத்தையும் மன்னிப்பான். அவன் மன்னிப்பவன்; நிகரற்ற அன்புடையோன் என்று (அல்லாஹ் கூறுவதைத் தெரிவிப்பீராக!

(அல்குர்ஆன் 39:53)

தன்னைத் தவிர வேறு எவரும் பாவங்களை மன்னிக்க முடியாது எனவும் அனைத்துப் பாவங்களையும் மன்னிக்கும் அதிகாரம் தன்னிடம் மட்டுமே உள்ளது எனவும் அவற்றில் வேறு யாருக்கும் பங்கில்லை எனவும் இந்த வசனங்கள் மூலம் இறைவன் அறிவிக்கிறான்.

இதனால் தான் எத்தனையோ நபிமார்கள் சில நேரங்களில் இறைவனின் கட்டளைக்கு மாறு செய்த போது, சிறிய தவறுகள் அவர்களிடம் நிகழ்ந்து விட்ட போது அல்லாஹ்விடம் மன்னிப்புக் கேட்டுள்ளனர். அல்லாஹ் தங்களை மன்னிக்காவிட்டால் தாங்கள் பெரு நஷ்டம் அடைய நேரும் எனவும் கூறியுள்ளனர்.

ஆதம் (அலை அவர்களும் அவர்களின் மனைவியும் இறைக்கட்டளைக்கு மாறு செய்த பின்

எங்கள் இறைவா! எங்களுக்கே தீங்கு இழைத்து விட்டோம். நீ எங்களை மன்னித்து, அருள் புரியவில்லையானால் நஷ்டமடைந்தோராவோம் என்று அவ்விருவரும் கூறினர்.

(அல்குர்ஆன் 7:23)

இறைவன் தம்மை மன்னிக்காவிட்டால் தாம் பெரு நஷ்டம் அடைய நேரும் என்று இருவருமே ஒரே குரலில் கூறியுள்ளனர்.

நூஹ் (அலை அவர்கள் தமக்கு ஞானமில்லாத விஷயம் பற்றிப் பிரார்த்தனை செய்த போது இறைவன் அவர்களைக் கடிந்து கொள்கிறான். அவர்களும் கூட ஆதம் (அலை அவர்களைப் போலவே அல்லாஹ்விடம் பாவமன்னிப்புத் தேடியுள்ளனர்.

நூஹ், தம் இறைவனை அழைத்தார். என் மகன் என் குடும்பத்தைச் சேர்ந்தவன். உனது வாக்குறுதியும் உண்மையே. நீயே தீர்ப்பு வழங்குவோரில் மேலானவன் என்றார். நூஹே! அவன் உன் குடும்பத்தைச் சேர்ந்தவன் அல்லன். இது நல்ல செயல் அல்ல. உமக்கு அறிவு இல்லதாது பற்றி என்னிடம் கேட்காதீர்! அறியாதவராக நீர் இருக்கக் கூடாது என உமக்கு அறிவுரை கூறுகிறேன் என்று அவன் கூறினான். இறைவா! எனக்கு அறிவு இல்லாதது பற்றி உன்னிடம் கேட்பதை விட்டும் உன்னிடமே நான் பாதுகாப்புத் தேடுகிறேன். நீ என்னை மன்னித்து அருள் புரியா விட்டால் நஷ்டமடைந்தவனாக ஆகி விடுவேன் என்று அவர் கூறினார்.

(அல்குர்ஆன் 11:45, 46, 47)

மூஸா (அலை அவர்கள் ஒருவரைக் கொலை செய்து விட்டு வருந்தும் போது அதற்காகவும் அல்லாஹ்விடமே பாவமன்னிப்புத் தேடினார்கள்.

அவ்வூரார் கவனமற்று இருந்த நேரத்தில் அவர் அங்கே சென்றார். அங்கே இரண்டு மனிதர்கள் சண்டையிட்டுக் கொண்டிருந்ததைக் கண்டார். ஒருவர் இவரது சமுதாயத்தைச் சேர்ந்தவர். இன்னொருவர் இவரது எதிரியின் சமுதாயத்தைச் சேர்ந்தவர். இவரது சமுதாயத்தைச் சேர்ந்தவர் எதிரிச் சமுதாயத்தைச் சேர்ந்தவருக்கு எதிராக இவரிடம் உதவி தேடி னார். உடனே மூஸா ஒரு குத்து விட்டார். உடனே அவன் கதை முடிந்து விட்டது. இது ஷைத்தானின் வேலை. அவன் வழி கெடுக்கும் தெளிவான எதிரி என்றார். என் இறைவா! எனக்கே நான் தீங்கு இழைத்து விட்டேன். எனவே என்னை மன்னிப்பாயாக! என்றார். அவன் அவரை மன்னித்தான். அவன் மன்னிப்பவன்; நிகரற்ற அன்புடையோன். என் இறைவா! நீ எனக்கு அருள் புரிந்ததால் குற்றவாளிகளுக்கு உதவுபவனாக இனிமேல் இருக்க மாட்டேன் என்றார்

(அல்குர்ஆன் 28:15, 16, 17.

மூஸா (அலை அவர்களின் சமுதாயத்தவர்கள் அல்லாஹ்வுக்கு இணை வைத்துப் பின்னர் தங்கள் தவறை உணர்ந்த போது மூஸா (அலை அவர்களிடம் பாவ மன்னிப்புக் கோராமல் அல்லாஹ்விடமே மன்னிப்புக் கேட்டுள்ளனர். தாங்கள் வழி தவறி விட்டதை உணர்ந்து அவர்கள் கைசேதப்பட்ட போது எங்கள் இறைவன் எங்களுக்கு அருள் புரிந்து, எங்களை மன்னிக்கா விட்டால் நஷ்ட மடைந்தோராவோம் என்றனர்.

(அல்குர்ஆன் 7:149)

நபிமார்களில் எவருக்கும் வழங்கப்படாத ஆற்றலும் அதிகாரமும் வழங்கப்பட்ட சுலைமான் (அலை அவர்களும் கூட தமது தவறுக்காக அல்லாஹ்விடமே மன்னிப்புக் கோரியுள்ளனர். ஸுலைமானை நாம் சோதித்தோம். அவரது சிம்மாசனத்தில் (அவரை ஒரு சடலமாகப் போட்டோம். பின்னர் அவர் திருந்தினார். என் இறைவா! என்னை மன்னித்து விடு! எனக்குப் பின் யாருக்கும் கிடைக்காத ஆட்சியை எனக்கு வழங்கு! நீயே வள்ளல் எனக் கூறினார்.

(அல்குர்ஆன் 38:34, 35)

திருக்குர்ஆனில் மிகவும் உயர்வாக இறைவனால் பாராட்டப்பட்ட இப்ராஹீம் (அலை அவர்களும் அல்லாஹ் தான் தமது தவறுகளை மன்னிக்க முடியும் என்று கூறியுள்ளனர். அவனே என்னைப் படைத்தான். அவனே எனக்கு நேர் வழி காட்டுகிறான். அவனே எனக்கு உணவளித்து (தண்ணீர் பருகச் செய்கிறான். நான் நோயுறும் போது அவனே எனக்கு நிவாரணம் தருகிறான். அவனே என்னை மரணிக்கச் செய்கிறான். பின்னர் எனக்கு உயிர் கொடுப்பான். தீர்ப்பு நாளில் என் தவறை அவன் மன்னிக்க வேண்டும் என ஆசைப்படுகிறேன்.

(அல்குர்ஆன் 26:78, 79, 80, 81, 82)

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் காலத்தில் நியாயமான காரண மின்றிப் போருக்குச் செல்லாமல் பின்தங்கி விட்ட மூன்று நபித்தோழர் களின் குற்றத்தை நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மன்னிக்கவில்லை. இறைவன் மன்னித்து விட்டதாக அறிவிக்கும் வரை அம்மூவரையும் விலக்கி வைத்தனர். இறைவன்

அவர்களை மன்னித்துவிட்டதாக அறிவித்த பின்பே அவர்களை இணைத்துக் கொண்டார்கள்.

தீர்ப்பு நிறுத்தி வைக்கப்பட்ட அந்த மூவரையும் (இறைவன் மன்னித்தான். பூமி விசாலமானதாக இருந்தும் அவர்களைப் பொறுத்த வரை அது சுருங்கி விட்டது. அவர்களது உள்ளங்களும் சுருங்கி விட்டன. அல்லாஹ்வை விட்டு (தப்பிக்க அவனிடமே தவிர வேறு போக்கிடம் இல்லை என்று அவர்கள் நம்பினார்கள். பின்னர் அவர்கள் திருந்துவதற்காக அவர்களை மன்னித்தான். அல்லாஹ் மன்னிப்பை ஏற்பவன்; நிகரற்ற அன்புடையோன்.

(அல்குர்ஆன் 9:118

(புகாரி 4418, 4677 ஆகிய ஹதீஸ்களில் முழு விபரம் காணலாம்.)

மன்னிக்கும் அதிகாரம் அல்லாஹ்வுக்கு மட்டுமே உரியது என்ப தால் தான் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் இவ்வாறு நடந்துள்ளனர்.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் முன் பின் பாவங்களைத் தான் மன்னித்து விட்டதாக (அல்குர்ஆன் 48:2 இறைவன் கூறுவதும்,

இறைவா! என்னை மன்னித்து அருள்புரி என்று கூறுவீராக!

(அல்குர்ஆன் 23:118)

என்று இறைவன் கட்டளையிடுவதும் மன்னிக்கும் அதிகாரம் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்கும் கூட இல்லை என்பதை ஐயத்திற்கிடமின்றி விளக்குகின்றன.

அல்லாஹ்விடம் நான் தினமும் நூறு தடவை பாவமன்னிப்புக் கேட்கிறேன் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறியுள்ளனர்

அறிவிப்பவர்: அல் அகர் (ரலி)

நூல்: முஸ்லிம் 4870

பாவமன்னிப்பு வழங்குவது அல்லாஹ்வின் தனி அதிகாரம் என்பதற்கு இவை உறுதியான சான்றுகள்! இத்தனை சான்றுகளுடனும் மேற்கண்ட மவ்லிது வரிகள் நேரடியாக மோதுவதால் மவ்லிது ஓதுவது பாவம் என்பதை அறியலாம்.

## நோய் நிவாரணம் தருவது நபிகள் நாயகமா?

اَلسَّلَامُ عَلَيْكَ يَا مُبْرِى السَّقَامِ

நோய் நீக்குபவரே! உங்களுக்கு ஸலாம் உண்டாகட்டும்

وَلَوْ تَكُوْنُ سَقِيْمًا

لَدَيْهِ بُرْءُ السَّقَامِ

நீ நோயாளியாக இருந்தால் அதற்கான நிவாரணம் அவரிடமே (நபியிடமே உள்ளது

وَمَرِيْضًا اَنْتَ عَائِدُهُ

قَدْ اَتَاهُ اللهُ بِالْفَرَجِ

(நபியே நீங்கள் எந்த நோயாளியை விசாரிக்கச் சென்றாலும் அல்லாஹ் அவருக்கு நிவாரணம் வழங்கி விடுவான்!

என்றெல்லாம் ஸுப்ஹான மவ்லிதில் கூறப்பட்டுள்ளது.

மனிதனுக்கு நோய்களை ஏற்படுத்துபவனும், அதை நீக்குபவனும் அல்லாஹ் தான். இதில் நபிமார்கள் உட்பட யாருக்கும் அதிகாரம் இல்லை என்பது இஸ்லாத்தின் அடிப்படைக் கொள்கை.

திருக்குர்ஆனிலும், ஹதீஸ்களிலும் இதற்கான சான்றுகளை ஏராளமாக நாம் காணலாம்.

இப்ராஹீம் (அலை அவர்கள் மிகச் சிறந்த இறைத்தூதராவார்கள். திருக்குர்ஆனில் அவர்களைப் பல இடங்களில் இறைவன் புகழ்ந்து பேசுகிறான். அவர்களின் மார்க்கத்தைப் பின்பற்றுமாறு நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்கு இறைவன் கட்டளையிடுவதிலிருந்து அவர்களின் மதிப்பு எத்தகையது என்று நாம் உணர முடியும்.

இப்ராஹீம் (அலை அவர்கள் ஏகத்துவப் பிரச்சாரம் செய்த போது இறைவனின் இலக்கணத்தைப் பின்வருமாறு விளக்கினார்கள்.

நான் நோயுறும் போது அவனே எனக்கு நிவாரணம் தருகிறான்.

(அல்குர்ஆன் 26 :80)

நோய்களை நீக்கும் அதிகாரம் இறைவனுக்குரியது என இப்ராஹீம் (அலை அவர்கள் மிகத் தெளிவாக விளக்கியுள்ளனர்.

அய்யூப் நபியவர்கள் நீண்ட காலம் நோய்வாய்ப்பட்ட போது தமது நோயை தாமே நீக்கிக் கொள்ளவில்லை. மாறாக இறைவனிடம் தான் அவர்கள் முறையிட்டனர். இறைவன் விரும்பிய போது அவர்களின் நோயைக் குணமாக்கினான்.

எனக்குத் துன்பம் நேர்ந்து விட்டது. நீ கருணையாளர்களுக்கெல்லாம் கருணையாளன் என அய்யூப் தமது இறைவனை அழைத்த போது, அவரது பிரார்த்தனையை ஏற்றுக் கொண்டோம். அவருக்கு ஏற்பட்ட துன்பத்தை நீக்கினோம். அவரது குடும்பத்தாரையும் அவர்களுடன் அவர்களைப் போன்றோரையும் நம் அருளாக அவருக்கு வழங்கினோம். வணங்குவோருக்கு இது அறிவுரை.

(அல்குர்ஆன் 21:83)

துன்பங்களையும், நோய்களையும் நீக்கும் அதிகாரம் நபிகள் நாயகத்துக்கும் இல்லை. அது இறைவனின் தனிப்பட்ட அதிகாரத்தில் உள்ளது என்று திருக்குர்ஆன் பல வசனங்களில் குறிப்பிடுகிறது.

அல்லாஹ் உமக்குத் துன்பத்தை ஏற்படுத்தினால் அவனைத் தவிர அதை நீக்குபவன் யாருமில்லை. அவன் உமக்கு நன்மையை ஏற்படுத்தி விட்டால் அவன் அனைத்துப் பொருட்களின் மீது ஆற்றலுடையவன்.

(அல்குர்ஆன் 6:17)

அல்லாஹ் நாடியதைத் தவிர எனக்கே தீங்கு செய்யவோ நன்மை செய்யவோ நான் அதிகாரம் பெற்றிருக்கவில்லை என்று (முஹம்மதே! கூறுவீராக! ஒவ்வொரு சமுதாயத்துக்கும் ஒரு காலக் கெடு உள்ளது. அவர்களின் காலக்கெடு வரும் போது சிறிது நேரம் அவர்கள் முந்தவும் மாட்டார்கள். பிந்தவும் மாட்டார்கள்

(அல்குர்ஆன் 10:49)

அல்லாஹ் உமக்கு ஒரு தீங்கை அளித்தால் அவனைத் தவிர அதை நீக்குபவன் யாருமில்லை. உமக்கு அவன் ஒரு நன்மையை நாடினால் அவனது அருளைத் தடுப்பவன் யாரும் கிடையாது. தனது அடியார்களில் நாடியோருக்கு அதை அளிப்பான். அவன் மன்னிப்பவன்; நிகரற்ற அன்புடையோன்.

(அல்குர்ஆன் 10:107)

வானங்களையும், பூமியையும் படைத்தவன் யார்? என்று அவர்களிடம் நீர் கேட்டால் அல்லாஹ் என்று கூறுவார்கள். அல்லாஹ்வையன்றி நீங்கள் பிரார்த்திப்பவற்றைப் பற்றிக் கூறுங்கள்! என்று கேட்பீராக! அல்லாஹ் எனக்கு ஒரு தீங்கை நாடி விட்டால் அவனது தீங்கை அவர்கள் நீக்கி விடுவார்களா? அல்லது அவன் எனக்கு அருளை நாடினால் அவர்கள் அவனது அருளைத் தடுக்கக் கூடியவர்களா? அல்லாஹ் எனக்குப் போதும். சார்ந்திருப்போர் அவனையே சார்ந்திருப்பார்கள் என்று கூறுவீராக!

(அல்குர்ஆன் 39:38)

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் பல்வேறு சந்தர்ப்பங்களில் பல போர்களைச் சந்தித்தார்கள். எதிரிகளைச் சந்திக்க வேண்டிய இந்த இக்கட்டான நேரத்தில் பல நபித்தோழர்கள் நோய்வாய்ப்பட்டுப் போரில் பங்கெடுக்க முடியாத நிலையில் இருந்தார்கள். நபியவர்களுக்கு நோய் தீர்க்கும் ஆற்றல் இருந்திருந்தால் இந்த நெருக்கடியான நேரத்தில் நோயுற்ற நபித்தோழர்களுக்கு நிவாரணம் அளித்திருப்பார்கள். அவர்களையும் போரில் பங்கெடுக்கச் செய்திருப்பார்கள். படை வீரர்கள் பற்றாக்குறையாக இருந்த இந்தக் கட்டத்தில் கூட அவ்வாறு செய்யவில்லை என்பதைப் பல ஹதீஸ்களிலிருந்து நாம் அறியலாம்.

நாங்கள் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுடன் ஒரு போரில் பங்கெடுத்தோம். அப்போது அவர்கள், நிச்சயமாக மதீனாவில் சில மக்கள் உள்ளனர். நீங்கள் சம தரையையோ,பள்ளத்தாக்கையோ கடந்து சென்றால் அவர்களும் (கூலி பெறுவதில் உங்களுடன் உள்ளனர். ஏனெனில் நோய் அவர்களைத் தடுத்து விட்டது என்று கூறினார்கள்.

அறிவிப்பவர்: அனஸ் (ரலி

நூல்: புகாரி 2839, 4423

சில சமயங்களில் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களே நோய்களுக்கு ஆளானதுண்டு. நோயிலிருந்து தாமே அவர்கள் நிவாரணம் பெற்றதில்லை. நோய் நீக்கும் ஆற்றலை அல்லாஹ் அவர்களுக்கு வழங்கியிருந்தால் அவர்களே நோய்க்கு ஆளாகியிருக்க மாட்டார்கள்.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்குக் காய்ச்சல் ஏற்பட்டிருந்த போது அவர்களிடம் சென்றேன். அல்லாஹ்வின் தூதரே! நீங்கள் கடுமையான காய்ச்சலால் பீடிக்கப்பட்டுள்ளீர்களா என்று கூறினேன். அதற்கவர்கள் ஆம் உங்களில் இருவருக்கு ஏற்படும் காய்ச்சல் அளவுக்கு எனக்கு ஏற்பட்டுள்ளது என்றார்கள்.

அறிவிப்பவர்: இப்னு மஸ்வூது (ரலி)

நூல்: புகாரி 5648, 5660, 5667

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் குடும்பத்தினரும் நோய் வாய்ப்பட்டனர். அவர்களில் யாரும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் நோய் நிவாரணம் தேடவில்லை. நான் குணப்படுத்துகிறேன் என்று அவர்களிடம் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களும் கூறவில்லை. இறைவன் மட்டுமே நோய் தீர்க்கும் அதிகாரம் படைத்தவன் என்பதை அவர்கள் அப்போது கூறிய வார்த்தை ஐயமற விளக்குகின்றது.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தமது குடும்பத்தில் ஒருவரை நோய் விசாரிக்கச் சென்றனர். தமது வலது கரத்தால் தடவிவிட்டு (அல்லாஹும்ம ரப்பன்னாஸ் அத்ஹிபில் பஃஸ இஷ்ஃபி அன்தஷ்ஷாஃபி, லாஷிஃபாஅ இல்லா ஷிஃபாவுக ஷிஃபா அன் லா யுகாதிரு ஸகமன் என்று கூறினார்கள்.

அறிவிப்பவர்: ஆயிஷா (ரலி)

நூல்: புகாரி 5675, 5742, 5743, 5750

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறியதன் பொருள்:

இறைவா! மனிதர்களின் இரட்சகனே! இந்நோயை நீக்குவாயாக! நீ நிவாரணம் அளிப்பாயாக! நீயே நிவாரணம் அளிப்பவன்! உனது நிவாரணத்தைத் தவிர வேறு நிவாரணம் ஏதுமில்லை. நோயை விட்டு வைக்காத வகையில் நிவாரணம் வழங்கு!

நோய் தீர்ப்பவன் அல்லாஹ் மட்டுமே என்பதை நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அழுத்தம் திருத்தமாக இதன் மூலம் அறிவித்து விட்டனர்.

ஸஃது பின் அபீ வக்காஸ் (ரலி அவர்களை நோய் விசாரிக்கச் சென்ற போது இறைவா! ஸஃதுக்கு நோய் நிவாரணம் வழங்கு என்றே மும்முறை பிரார்த்தனை செய்தார்கள். இதை ஸஃது அவர்களே தெரிவிக்கிறார்கள்.

நூல்: புகாரி 5659

அல்லாஹ் ஒருவன் மட்டுமே நோய்களை நீக்கக் கூடியவன் என்பதையே அவர்கள் மக்களுக்குப் போதனை செய்தார்கள். அல்லாஹ் அனுமதிக்கும் போது மிக மிகக் குறைந்த சந்தர்ப்பங்களில் அற்புதம் என்ற அடிப்படையில் அல்லாஹ்விடமே கோரி நிவாரணம் பெற்றுத் தந்துள்ளனர்.

அல்லாஹ் அனுமதிக்காத பல நூறு சந்தர்ப்பங்களில் அல்லாஹ்விடம் முறையிட்டார்கள். தாமே நோய் தீர்க்க வல்லவர் என்று சொன்னதே இல்லை.

அவர்கள் உயிருடன் வாழ்ந்த காலத்தில் அவர்களை நேரில் சந்தித்து நோய் விலகிட இறைவனிடம் துஆச் செய்யுமாறு பல நபித்தோழர்கள் கேட்டதுண்டு. ஆனால் நீங்களே குணப்படுத்துங்கள் என்று கேட்டதில்லை.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் ஒரு மகள், தமது மகன் மரணத்தை நெருங்கிவிட்டதாகவும் உடனே வரவேண்டும் என்றும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்குச் சொல்லியனுப்பினார்... நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் அக்குழந்தை கொடுக்கப்பட்டது. அக்குழந்தையை நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தமது மடியில் கிடத்தினார்கள். அதன் உயிர் மூச்சு தடுமாறியது. இதைக் கண்டு அவர்களின் கண்கள் கண்ணீர் சொரிந்தன.

நூல்: புகாரி 1248

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தமது குடும்பத்தில் ஒருவருக்கு நோய் ஏற்பட்ட போது கண்ணீர் தான் விட முடிந்தது. நோயைத் நீக்க முடியவில்லை என்பதை இந்த ஹதீஸ் தெளிவுபடுத்துகிறது.

திருக்குர்ஆனுக்கும், நபிவழிக்கும் முரணாக அமைந்த இந்த மவ்லிதைப் பாடுவது நன்மை தருமா? பாவத்தில் தள்ளுமா? என்று சிந்தித்துப் பாருங்கள்!

## உணவளிக்கும் அதிகாரம் நபிகள் நாயகத்துக்கு உண்டா?

بَسَطْتُّ كَفَّ فَاقَتِيْ وَالنَّدَمِ

اَرْجُوْ جَزِيْلَ فَضْلِكُمْ وَالْكَرَمِ

مُسْتَشْفِعًا نَزِيْلَ هَذَاالْحَرَمِ

فَلاَحِظُوْنِيْ بِدَوَامِ الْمَدَدِ

فَاَنْجِدُواالْمِسْكِيْنَ قَبْلَ الْغَرَقِ

وَاَطْفِئُوْا بِالْبَسْطِ وَهْجَ الْحُرَقِ

وَاَبْرِدُوْا بِاللُّطْفِ حَرَّ الْكَبِدِ

எனது வறுமை, கவலை காரணமாகக் கையேந்துகிறேன்.

உங்களின் அளப்பரிய அருளையும், வள்ளல் தன்மையையும் நான் நம்பியுள்ளேன்.

இந்த ஹரமில் (மதீனாவில் தங்கியிருக்கும் உங்களின் பரிந்துரையை வேண்டுகிறேன்.

என்னை நிரந்தரமான உதவி கொண்டு கவனித்து விடுங்கள்!

மூழ்குவதற்கு முன் இந்த ஏழையைக் காப்பாற்றி விடுங்கள்!

உங்கள் தாராளத் தன்மையால் எரியும் வெப்பத்தை அணைத்து விடுங்கள்!

உங்கள் இரக்கத்தால் ஈரலின் வெப்பத்தைக் குளிரச்செய்யுங்கள்!

اِنَّا بِهِ نَسْتَجِيْر

فِيْ دَفْعِ كُلِّ انْتِقَامِ

எல்லாத் துன்பங்களையும் நீக்கிட அவரிடம் நாம் அடைக்கலம் தேடுகிறோம்.

இவை யாவும் ஸுப்ஹான மவ்லிதில் காணப்படும் நச்சுக் கருத்துக்கள்!

மனிதர்களுக்கும், மற்ற உயிரினங்களுக்கும் உணவளிப்பவன் அல்லாஹ் தான் என்பது இஸ்லாத்தின் அடிப்படைக் கொள்கை. திருக்குர்ஆன் நெடுகிலும் இந்தக் கொள்கை பரவலாக வலியுறுத்தப்பட்டுள்ளது.

பெற்றோருக்கு உதவுங்கள்! வறுமையின் காரணமாக உங்கள் குழந்தைகளைக் கொல்லாதீர்கள்! உங்களுக்கும், அவர்களுக்கும் நாமே உணவளிக்கிறோம்.

(அல்குர்ஆன்6:151)

மக்கள் உங்களை வாரிச் சென்று விடுவார்களோ என அஞ்சி, குறைந்த எண்ணிக்கையில் இப்பூமியில் நீங்கள் இருந்ததை எண்ணிப் பாருங்கள்! அவன் உங்களை அரவணைத்தான். தனது உதவியால் உங்களைப் பலப்படுத்தினான். நீங்கள் நன்றி செலுத்திட தூய்மையானவற்றை உங்களுக்கு உணவாக அளித்தான்.

(அல்குர்ஆன் 8:26)

பூமியில் உள்ள உயிரினம் எதுவாக இருந்தாலும் அவற்றுக்கு உணவளிப்பது அல்லாஹ்வின் பொறுப்பாகும். அவற்றின் வசிப்பிடத்தையும், அவை சென்றடையும் இடத்தையும் அவன் அறிவான். ஒவ்வொன்றும் தெளிவான பதிவேட்டில் உள்ளது.

(அல்குர்ஆன் 11:6)

தான் நாடியோருக்கு அல்லாஹ் செல்வத்தைத் தாராளமாக வழங்குகிறான். குறைத்தும் வழங்குகிறான்.

(அல்குர்ஆன் 13:26)

அல்லாஹ் தான், வானங்களையும், பூமியையும் படைத்தான். வானிலிருந்து தண்ணீரை இறக்கினான். அதன் மூலம் உங்களுக்கு உணவாகக் கனிகளை வெளிப் படுத்தினான். அவனது கட்டளைப்படி கடலில் செல்வதற்காக கப்பலையும் உங்களுக்குப் பயன்படச் செய்தான். ஆறுகளையும் உங்களுக்குப் பயன்படச் செய்தான்.

(அல்குர்ஆன் 14:32)

உங்களுக்கும், நீங்கள் யாருக்கு உணவளிப்போராக இல்லையோ அவர்களுக்கும் அதில் வாழ்வதற்குத் தேவையானவற்றை அமைத்தோம்.

(அல்குர்ஆன் 15:20)

உங்களில் ஒருவரை விட மற்றவரை செல்வத்தில் அல்லாஹ் சிறப்பித்திருக்கிறான். (செல்வத்தால் சிறப்பிக்கப் பட்டோர் தமது செல்வத்தைத் தமது அடிமைகளிடம் கொடுத்து,தங்களுக்குச் சமமாக அவர்களை ஆக்குவதில்லை. அல்லாஹ்வின் அருட்கொடையையா நிராகரிக்கிறார்கள்?

(அல்குர்ஆன் 16:71)

தான் நாடியோருக்கு உமது இறைவன் செல்வத்தைத் தாராளமாக வழங்குகிறான். குறைத்தும் வழங்குகிறான். அவன் தனது அடியார்களை நன்கறிந்தவனாகவும், பார்ப்பவனாகவும் இருக்கிறான். வறுமைக்கு அஞ்சி உங்கள் குழந்தைகளைக் கொல்லாதீர்கள்! அவர்களுக்கும், உங்களுக்கும் நாமே உணவளிக்கிறோம். அவர்களைக் கொல்வது பெரிய குற்றமாகும்.

(அல்குர்ஆன் 17:30, 31)

(முஹம்மதே! உமது குடும்பத்தினரைத் தொழுமாறு ஏவுவீராக! அதில் (ஏற்படும் சிரமங்களை சகித்துக் கொள்வீராக! உம்மிடம் நாம் செல்வத்தைக் கேட்கவில்லை. நாமே உமக்கு செல்வத்தை அளிக்கிறோம். (இறைஅச்சத்திற்கே (நல்ல முடிவு உண்டு.

(அல்குர்ஆன் 20:132)

(நீங்கள் இணை கற்பித்தவை சிறந்தவையா? அல்லது படைப்பினங்களை முதலில் படைத்து பின்னர் மறுபடியும் படைப்பவனா? வானத்திலிருந்தும், பூமியிலிருந்தும் உங்களுக்கு உணவளிப்பவனா? அல்லாஹ்வுடன் வேறு கடவுளா? நீங்கள் உண்மையாளர்களாக இருந்தால் உங்கள் சான்றைக் கொண்டு வாருங்கள்!என்று கேட்பீராக!

(அல்குர்ஆன் 27:64)

அல்லாஹ்வையன்றி நீங்கள் கற்பனையாகப் படைத்த சிலைகளையே வணங்குகிறீர்கள். அல்லாஹ்வையன்றி நீங்கள் யாரை வணங்குகிறீர்களோ அவர்கள் உங்களுக்குச் செல்வம் வழங்க இயலாது. எனவே அல்லாஹ்விடமே

செல்வத்தைத் தேடுங்கள்! அவனையே வணங்குங்கள்! அவனுக்கு நன்றி செலுத்துங்கள்! அவனிடமே திரும்பக் கொண்டு வரப்படுவீர்கள்!

(அல்குர்ஆன் 29:17)

எத்தனையோ உயிரினங்கள் தமது உணவைச் சுமந்து செல்வதில்லை. அல்லாஹ்வே அவற்றுக்கும், உங்களுக்கும் உணவளிக்கிறான். அவன் செவியுறுபவன்; அறிந்தவன்.

(அல்குர்ஆன் 29:60)

அல்லாஹ் தனது அடியார்களில், தான் நாடியோருக்கு செல்வத்தைத் தாராளமாக வழங்குகிறான். தான் நாடியோருக்கு அளவுடனும் வழங்குகிறான். அல்லாஹ் ஒவ்வொரு பொருளையும் அறிந்தவன்

(அல்குர்ஆன் 29:62)

தான் நாடியோருக்குச் செல்வத்தை அல்லாஹ் தாராளமாகவும், குறைத்தும் வழங்குகிறான் என்பதை அவர்கள் பார்க்கவில்லையா? நம்பிக்கை கொள்ளும் சமுதாயத்துக்கு இதில் பல சான்றுகள் உள்ளன.

(அல்குர்ஆன் 30:37)

வானங்களிலும், பூமியிலும் உங்களுக்கு உணவளிப்பவன் யார்? என்று (முஹம்மதே! கேட்டு,அல்லாஹ் என்று கூறுவீராக! நாமோ அல்லது நீங்களோ நேர் வழியிலோ பகிரங்கமான வழி கேட்டிலோ இருக்கிறோம்.

(அல்குர்ஆன் 34:24)

என் இறைவன், தான் நாடியோருக்கு செல்வத்தைத் தாராள மாக வழங்குகிறான். குறைத்தும் வழங்குகிறான். எனினும் மனிதர் களில் அதிகமானோர் அறிய மாட்டார்கள் என்று கூறுவீராக!

(அல்குர்ஆன் 39:36)

எனது இறைவன் தனது அடியார்களில் தான் நாடியோருக்குச் செல்வத்தைத் தாராளமாக வழங்குகிறான். தான் நாடியோருக்கு அதை குறைத்தும் கொடுக்கிறான். நீங்கள் எப்பொருளை (நல் வழியில் செலவிட்டாலும் அவன் அதற்கான பிரதி பலனை அளிப்பான். அவன் வழங்குவோரில் சிறந்தவன் என்று கூறுவீராக!

(அல்குர்ஆன் 39:39)

மனிதர்களே! உங்களுக்கு அல்லாஹ் செய்துள்ள அருளை எண்ணிப் பாருங்கள்! வானத்திலிருந்தும், பூமியிலிருந்தும் உங்களுக்கு உணவளிக்கிறான். அல்லாஹ்வைத் தவிர படைப்பவன் உண்டா? அவனைத் தவிர வணக்கத்திற்குரியவன் வேறு யாருமில்லை. எவ்வாறு திசை திருப்பப்படுகிறீர்கள்?

(அல்குர்ஆன் 35:3)

தான் நாடியோருக்கு செல்வத்தைத் தாராளமாகவும், குறைத்தும் அல்லாஹ் வழங்குகிறான் என்பதை அவர்கள் அறியவில்லையா? நம்பிக்கை கொள்ளும் சமுதாயத்திற்கு இதில் பல சான்றுகள் உள்ளன.

(அல்குர்ஆன் 39:52)

வானங்கள் மற்றும் பூமியின் திறவு கோல்கள் அவனுக்கே உரியன. தான் நாடியோருக்குச் செல்வத்தை அவன் தாராளமாக வழங்குகிறான். குறைத்தும் வழங்குகிறான். அவன் ஒவ்வொரு பொருளையும் அறிந்தவன்.

(அல்குர்ஆன் 42:12)

அவன் தனது உணவை நிறுத்தி விட்டால் உங்களுக்கு உணவளிப்பவன் உண்டா? மாறாக வரம்பு மீறுவதிலும் வெறுப்பிலுமே அவர்கள் மூழ்கி விட்டனர்.

(அல்குர்ஆன் 67:21)

மனிதன் படைக்கப்படுவதற்கு முன்பே அவனது உணவு மற்றும் வசதிகள் இறைவனால் முடிவு செய்யப்பட்டு விடுகின்றன என்று கூறும் நபிமொழிகள் ஏராளமாக உள்ளன.

நூல்: புகாரி 318, 3333, 6595

உணவளிக்கும் அதிகாரம் அல்லாஹ்வுக்கு மட்டுமே உள்ள தனிப்பட்ட அதிகாரம். அதில் நபிமார்கள் உள்ளிட்ட எவருக்கும் எந்தப் பங்கும் இல்லை என்று இந்த வசனங்கள் சந்தேகத்திற்கு இடமின்றி அறிவிக்கின்றன. அல்லாஹ்வின் இந்தப் பிரகடனத்துக்கு எதிராக ஸுப்ஹான மவ்லிதின் இந்த வரிகள் அமைந்துள்ளன.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் ஏகத்துவப் பிரச்சாரத்தை எதிர்த்து வந்த காபிர்கள், பல தெய்வங்களை வழிபட்டு வந்த முஷ்ரிக்குகள் கூட உணவளிக்கும் அதிகாரம் அல்லாஹ்வுக்கு மட்டுமே உரியது என்று நம்பி வந்ததாகத் திருக்குர்ஆன் கூறுகின்றது.

வானத்திலிருந்தும், பூமியிலிருந்தும் உங்களுக்கு உணவளிப்பவன் யார்? செவிப் புலனையும்,பார்வைகளையும் தன் கைவசம் வைத்திருப்பவன் யார்? உயிரற்றதிலிருந்து உயிருள்ளதையும், உயிருள்ளதிலிருந்து உயிரற்றதையும் வெளிப்படுத்துபவன் யார்?காரியங்களை நிர்வகிப்பவன் யார்? என்று கேட்பீராக! அல்லாஹ் என்று கூறுவார்கள். அஞ்ச மாட்டீர்களா? என்று நீர் கேட்பீராக!

(அல்குர்ஆன் 10:31)

மக்கத்துக் காபிர்கள் கூட உணவளிக்கும் அதிகாரம் அல்லாஹ்வுக்கு மட்டுமே சொந்தமான தனியுரிமை என்று நம்பியிருந்தார்கள் என்பதற்கு இவ்வசனம் சான்றாக உள்ளது. உணவளிக்கும் அதிகாரம் தனக்கு மட்டுமே உரியது என்பதை அல்லாஹ் பல இடங்களில் தெளிவாகக் குறிப்பிடுகிறான்.

அல்லாஹ்வே உங்களைப் படைத்தான். பின்னர் உங்களுக்கு உணவளித்தான். பின்னர் உங்களை மரணிக்கச் செய்வான். பிறகு உங்களை உயிர்ப்பிப்பான். உங்கள் தெய்வங்களில் இவற்றில் ஏதேனும் ஒன்றைச் செய்வோர் உள்ளனரா? அவன் தூயவன். அவர்கள் இணை கற்பிப்பதை விட்டும் உயர்ந்தவன்.

(அல்குர்ஆன் 30:40)

படைத்தல், மரணிக்கச் செய்தல், மீண்டும் உயிர்ப்பித்தல் ஆகியவை எப்படி இறைவனின் தனிப்பட்ட உரிமையோ அது போன்று உணவளிப்பதும் அவனது

தனிப்பட்ட உரிமையாகும். இந்த நான்கில் எந்த ஒன்றையும் எவரும் செய்ய முடியாது என்று தெளிவான பிரகடனம் இது.

இந்த உரிமை இறைவனுக்கு மாத்திரம் சொந்தமானது என்பதால் தான் எத்தனையோ நபிமார்களை இறைவன் வறுமையில் வைத்திருந்தான். நபித்தோழர்கள் பசியால் துடித்திருக்கின்றனர்.

நபியவர்களுக்கு வறுமையை விரட்டும் அதிகாரம் இருந்திருந்தால் அவர்களே வறுமையில் வாடியிருக்க மாட்டார்கள்.

பல நாட்கள் பட்டினி கிடந்த நபித்தோழர்கள்,

வயிற்றில் கற்களைக் கட்டிக் கொண்டவர்கள்,

ஒரேயொரு பேரீச்சம் பழத்தைச் சாப்பிட்டு உயிரைத் தக்க வைத்துக் கொண்டவர்கள்,

தங்குவதற்குக் கூட சொந்த இடமில்லாமல் பள்ளிவாசலில் தங்கியவர்கள்,

இறந்த பின் போர்த்துவதற்குக் கூடப் போதிய ஆடையில்லாமல் புல் பூண்டுகளால் மறைக்கப்பட்டவர்கள்,

ஒட்டுப்போட்ட ஆடைகளை அணிந்தவர்கள்,

வீட்டில் விளக்கெரிக்கக் கூட வழியில்லாதவர்கள்,

வெறும் தண்ணீரைக் கொடுத்து குழந்தைகளை உறங்க வைத்தவர்கள்

என்று பல்வேறு வகைகளில் வறுமை அவர்களை ஆட்டிப் படைத்தது.

அவர்களில் எவரும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் தங்கள் வறுமையை நீக்குமாறு வேண்டவில்லை. அல்லாஹ்விடமே வேண்டினார்கள். அவனிடமே வேண்டுமாறு தான் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களும் போதித்தனர். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் உயிருடன் இருந்தும் அவர்களை நேரில் கண்டிருந்தும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் வறுமையை நீக்குமாறு கோரவில்லை.

ஆனால் ஸுப்ஹான மவ்லூதில் வறுமையை நீக்குமாறு நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் பிரார்த்திக்கப்படுகின்றது. அவர்கள் தான் வறுமையை நீக்க முடியும் என்று கூறப்படுகின்றது.

ஸுப்ஹான மவ்லூது திருக்குர்ஆன் வசனங்களுடன் நேரடியாக மோதுகின்றதா?இல்லையா? சிந்தியுங்கள்!

## வானவர்கள் மீது அவதூறு

இந்த மவ்லூதின் கடைசிப் பாடலாக யாஸையதீ.. என்ற பாடல் இடம் பெற்றுள்ளது. இப்பாடலின் தலைப்பில் இது ஜிப்ரீல் (அலை அவர்களால் பாடப்பட்டது எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. மார்க்க அறிவு சிறிதும் இல்லாதவர்களால் தான் மவ்லூது இயற்றப்பட்டது என்பதற்கு இந்தத் தலைப்பு ஒன்றே போதிய சான்றாக அமைந்திருக்கிறது. ஜிப்ரீல் (அலை பாடிய(? பாடலைக் கேளுங்கள்!

**اِنِّيْ اِذَا مَسَّنِيْ ضَيْمٌ يُرَوِّعُنِيْ**

**اَقُوْلُ يَا سَيِّدَ السَّادَاتِ يَا سَنَدِيْ**

**كُنْ لِيْ شَفِيْعًا اِلَى**

**الرَّحْمَانِ مِنْ زَلَلِيْ**

**وَامْنُنْ عَلَيَّ بِمَا**

**لاكَانَ فِيْ خَلَدِيْ**

**وَانْظُرْ بِعَيْنِ الرِّضَا**

**لِيْ دَائِمًا اَبَدًا**

**وَسْتُرْ بِطَوْلِكَ**

**تَقْصِيْرِيْ مَدَى الاَمَدِ**

என்னை அச்சுறுத்தும் அளவு எனக்கு அநீதி இழைக்கப்பட்டால்

தலைவர்களுக்கெல்லாம் தலைவா! என் ஊன்றுகோலே! என்று உங்களை நான் அழைப்பேன்.

என் குற்றங்களுக்காக ரஹ்மானிடம் பரிந்துரைப்பவராக நீங்கள் ஆகி விடுங்கள்!

என் கற்பனையிலும் தோன்றாத உதவிகளை எனக்குச் செய்யுங்கள்!

என்றென்றும் நிரந்தரமாக திருப்தியான பார்வையுடன் என்னைக் கவனித்துக் கொள்ளுங்கள்.

உங்கள் அருளால் எனது குறைகளைக் காலாகாலம் மறைத்து விடுங்கள்!

ஜிப்ரீல் (அலை அவர்கள் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களை அழைத்து இவ்வாறு பிரார்த்தனை செய்தததாகக் கூறப்படுவது சரிதானா?

ஜிப்ரீல் (அலை அவர்கள் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் வந்து இவ்வாறு பாடியிருந்தால் இது திருக்குர்ஆனில் இடம்பெற்றிருக்க வேண்டும் அல்லது நபித்தோழர்கள் வாயிலாக அறிவிக்கப்படும் ஹதீஸ்களில் இடம் பெற்றிருக்க வேண்டும். இரண்டிலுமே இவ்வாறு கூறப்படவில்லை.

திருக்குர்ஆனிலும், நபிமொழிகளிலும் காணப்படாத இந்த விபரத்தை இன்றைக்கு முன்நூறு ஆண்டுகளுக்கு முந்தையவர்கள் எப்படி அறிந்து கொள்ள முடிந்தது? இந்தப் பாடல் வரிகளின் பொருளைக் கவனித்தால் கூட இது எவ்வளவு அபத்தம் என்பதை உணர முடியும்.

ஜிப்ரீல் (அலை அவர்களுக்கு அச்சுறுத்தும் அளவு அநீதி இழைக்கப்படும் என்றும் அவர்கள் தவறுகள் செய்ய முடியும் என்றும், அவர்களிடம் மறைக்கத் தக்க குறைபாடுகள் பல உள்ளன என்றும் இப்பாடல் வரிகள் கூறுகின்றன. ஆனால் மலக்குகளைப் பற்றி பொதுவாகவும் ஜிப்ரீல் (அலை அவர்களைப் பற்றிக் குறிப்பாகவும் அல்லாஹ் கூறுவது இந்தப் பாடல் வரிகளுக்கு சம்மட்டி அடி கொடுக்கும் வகையில் அமைந்துள்ளது.

நம்பிக்கை கொண்டோரே! உங்களையும் உங்கள் குடும்பத்தினரையும் நரகை விட்டுக் காத்துக் கொள்ளுங்கள்! அதன் எரிபொருள் மனிதரும் கற்களுமாகும். அதன் மேல் கடுமையும், கொடூரமும் கொண்ட வானவர்கள் உள்ளனர். தமக்கு அல்லாஹ் ஏவியதில் மாறு செய்ய மாட்டார்கள். கட்டளையிடப் பட்டதைச் செய்வார்கள்.

(அல்குர்ஆன் 66:6

அளவற்ற அருளாளன் சந்ததியை ஏற்படுத்திக் கொண்டான் எனக் கூறுகின்றனர். அவன் தூயவன். மாறாக அவர்கள் (வானவர்கள் மரியாதைக்குரிய அடியார்கள். அவர்கள் அவனை முந்திப் பேச மாட்டார்கள். அவனது கட்டளைப்படியே செயல்படுவார்கள்.

(அல்குர்ஆன் 21:27, 28

என்று மலக்குகளின் இயல்புகளைப் பற்றி அல்லாஹ் கூறுகிறான். அல்லாஹ்வின் கட்டளைக்கு மாறு செய்ய முடியாத இயல்பில் படைக்கப்பட்ட மலக்குகள்,இந்தப் பாடலில் கூறப்படும் தவறுகளை எப்படிச் செய்திருக்க முடியும்?

பரிசுத்தமான உயிர் (அல்குர்ஆன் 2:87,2:253,5:110,16:102 என்றும்,

நம்பிக்கைக்குரிய உயிர் (26:193 என்றும்,

வல்லமை மிக்கவர் (53:5 என்றும்

ஜிப்ரீல் (அலை அவர்கள் சிறப்பித்துக் கூறப்படுகின்றனர்.

இத்தகைய சிறப்பு கொண்ட ஜிப்ரீல் (அலை அவர்கள் தவறு செய்வார்கள் என்றும், அவர்கள் அச்சுறுத்தலுக்கு ஆளாவார்கள் என்றும் கூறும் இந்த மவ்லூதுப் பாடலை எப்படி நம்ப முடியும்?

ஜிப்ரீல் (அலை அவர்கள் தவறு செய்வார்கள் என்று நம்பினால், அவர்கள் கொண்டு வந்த வஹியிலும் அவர்கள் தவறு செய்யக் கூடும் என்ற சந்தேகத்தை ஏற்படுத்தாதா? இது குர்ஆனிலும் சந்தேகத்தை ஏற்படுத்தாதா? ஜிப்ரீல் (அலை அவர்கள் இத்தகைய தவறுகளைச் செய்ய மாட்டார்கள் என்பது ஒரு புறமிருக்கட்டும். அப்படியே இந்தத் தவறுகளைச் செய்தால் கூட அதற்காக நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் ஏன் அவர்கள் உதவி தேட வேண்டும்? அல்லாஹ்வின் தூதருடைய கோரிக்கைகளைக் கூட அல்லாஹ்விடம் எடுத்துச் சொல்லக் கூடிய ஜிப்ரீல் (அலை அவர்கள் நேரடியாகவே அல்லாஹ்விடம் தமது கோரிக்கைகளை எடுத்து வைக்க முடியாதா? என்பதை மவ்லூது அபிமானிகள் சிந்தித்தால் மவ்லூதுகளை நியாயப்படுத்த மாட்டார்கள்.

ஏனெனில் துன்பம் ஏற்படும் போது நபிகள் நாயகம் (ஸல்) அவர்களை அழைத்து உதவி தேடுமாறு அல்லாஹ் நமக்குப் போதிக்கவில்லை. மாறாகத் தன்னிடம்

உதவி தேடுமாறு தான் கட்டளையிடுகிறான். நபிகள் நாயகம் (ஸல்) அவர்களும் அவ்வாறே நமக்கு வழிகாட்டிச் சென்றுள்ளனர்.

அல்லாஹ் நாடியதைத் தவிர எனக்கே தீங்கு செய்யவோ நன்மை செய்யவோ நான் அதிகாரம் பெற்றிருக்கவில்லை என்று (முஹம்மதே! கூறுவீராக!

(அல்குர்ஆன் 10:49)

நான் எனது இறைவனையே பிரார்த்திக்கிறேன். அவனுக்கு யாரையும் இணையாக்க மாட்டேன் என (முஹம்மதே! கூறு வீராக! நான் உங்களுக்கு தீங்கு செய்யவும், நன்மை செய்யவும் அதிகாரம் பெற்றிருக்கவில்லை என்றும் கூறுவீராக! அல்லாஹ் விடமிருந்து என்னை எவரும் காப்பாற்ற மாட்டார். அவனன்றி ஒதுங்குமிடத்தையும் காணமாட்டேன் என்றும் கூறுவீராக!

(அல்குர்ஆன் 72:20, 21, 22)

(முஹம்மதே! அதிகாரத்தில் உமக்கு ஏதுமில்லை. அவன் அவர்களை மன்னிக்கலாம். அல்லது அவர்களைத் தண்டிக்கலாம். ஏனெனில் அவர்கள் அநீதி இழைத்தவர்கள்.

(அல்குர்ஆன் 3:128)

தூதர்களில் நான் புதியவன் அல்லன். எனக்கோ, உங்களுக்கோ என்ன செய்யப்படும் என்பதை அறிய மாட்டேன். எனக்கு அறிவிக்கப்படுவதைத் தவிர வேறு எதையும் நான் பின்பற்றவில்லை. நான் தெளிவாக எச்சரிக்கை செய்பவனே தவிர வேறில்லை எனக் கூறுவீராக!

(அல்குர்ஆன் 46:9)

அல்லாஹ்வே! ஆட்சியின் அதிபதியே! நீ நாடியோருக்கு ஆட்சியை வழங்குகிறாய். நீ நாடியோரிடமிருந்து ஆட்சியைப் பறித்துக் கொள்கிறாய். நாடியோரைக் கண்ணியப்படுத்துகிறாய். நாடியோரை இழிவு படுத்துகிறாய். நன்மைகள் உன் கைவசமே உள்ளன. நீ அனைத்துப் பொருட்களின் மீதும் ஆற்றலுடையவன் என்று கூறுவீராக! இரவைப் பகலில் நுழைக்கிறாய்! பகலை இரவில் நுழைக்கிறாய்! உயிரற்றதிலிருந்து உயிருள்ளதை வெளிப்படுத்துகிறாய். உயிருள்ளதிலிருந்து

உயிரற்றதை வெளிப்படுத்துகிறாய். நீ நாடியோருக்குக் கணக்கின்றி வழங்குகிறாய் (என்றும் கூறுவீராக!)

(அல்குர்ஆன் 3:26)

என்றெல்லாம் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களை கூறச் செய்து எல்லா அதிகாரமும் தனக்குரியதே எனத் திட்டவட்டமாக இறைவன் அறிவிக்கின்றான்.

இந்த அறிவிப்புக்கு முரணாக நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்கு அல்லாஹ்வின் அதிகாரத்தைப் பங்கிட்டுக் கொடுக்கும் வகையில் இந்தக் கவிதை வரிகள் அமைந்துள்ளன.

## பொய்யும் புரட்டும்

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் பிறந்தவுடன் அவர்களின் பாட்டனார் அப்துல் முத்தலிப் பேரக் குழந்தையை அணைத்துக் கொண்டு அந்தக் குழந்தையின் முகத்தைப் பார்த்து புன்னகை புரிந்து விட்டுப் பாடியதாக ஒரு கவிதை ஸுப்ஹான மவ்லூதில் இடம் பெற்றுள்ளது. அப்பாடலில்,

اَنْتَ الَّذِيْ سُمِّيْتَ فِى الْقُرْآنِ

اَحْمَدَ مَكْتُوْبًا عَلَى الْجِنَانِ

என்று கூறப்படுகிறது. குர்ஆனிலேயே உங்களைப் பற்றி அஹ்மத் என்று கூறப்பட்டுள்ளது. சொர்க்கங்களிலும் இது எழுதப்பட்டுள்ளது

என்பது இதன் பொருள்.

கைக்குழந்தையாக இருந்த நபிகள் நாயகம் (ஸல்) அவர்களை நோக்கி அவர்களின் பாட்டனார் இவ்வாறு கூறியிருக்க முடியுமா? நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கைக்குழந்தையாக இருந்த போதே குர்ஆன் இருந்ததா? அந்தக் குர்ஆனை அப்துல் முத்தலிப் படித்தாரா என்ற சாதாரண உண்மையைக் கூட அறியாமல் உளறிக் கொட்டியுள்ளனர்.

குர்ஆன் என்பது முந்தைய வேதங்களைக் குறிக்கும் என்று சமாளிக்கவும் முடியாது.

முந்தைய வேதங்கள் என்று வைத்துக் கொண்டாலும் அந்த முந்தைய வேதங்களைக் கற்றறிந்த கிறித்தவராக அப்துல் முத்தலிப் இருந்தாரா? அப்படியே இருந்தாலும் முந்தைய வேதங்களில் அஹ்மத் என்று கூறப்பட்டிருப்பது தமது பேரக் குழந்தை தான் என்று எப்படி கண்டு கொண்டார்?

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்கே நாற்பது வயதுக்கு முன், தாம் ஒரு நபி என்பது தெரியவில்லையே?

இவ்வாறே நமது கட்டளையில் உயிரோட்டமானதை உமக்கு அறிவித்தோம். வேதம் என்றால் என்ன? நம்பிக்கை என்பது என்ன என்பதை (முஹம்மதே! நீர்

அறிந்தவராக இருக்கவில்லை. மாறாக நமது அடியார்களில் நாம் நாடியோருக்கு நேர் வழி காட்டும் ஒளியாக இதை ஆக்கினோம். நீர் நேரான பாதைக்கு அழைக்கிறீர்.

(அல்குர்ஆன் 42:52)

இக்ரஃ என்று முதல் பகுதி அருளப்பட்டவுடன் கூட தமக்கு ஏதோ நேர்ந்து விட்டதாக எண்ணி நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அஞ்சினார்கள். நடுங்கினார்கள்! போர்வையைப் போர்த்துங்கள் என்றார்கள். வரகா பின் நவ்பல் (ரலி அவர்கள் உறுதி செய்த பிறகு தான்,தாம் ஒரு நபி என்பது அவர்களுக்கே உறுதியானது

(நூல்: புகாரி 4.)

ஆனால் அப்துல் முத்தலிபுக்கோ கைக்குழந்தையாக நபிகள் நாயகம் (ஸல்) அவர்களைப் பார்த்தவுடன் இந்த விஷயம் தெரிந்து விட்டது என்று கூறினால் அது அறியாமை இல்லையா?

சொர்க்கத்தில் வேறு இது எழுதப்பட்டிருந்ததாம். நரகத்திற்குச் செல்லக்கூடிய அப்துல் முத்தலிப் சொர்க்கத்தில் எழுதப்பட்டதைப் பார்த்தது எப்படி? இது அதை விட அறியாமை இல்லையா?

குர்ஆனைப் பற்றியும் ஹதீஸ்களைப் பற்றியும் கடுகளவாவது ஞானமிருந்தால் இப்படி எழுதியிருக்க முடியுமா? அரபுமொழியில் எழுதப்பட்ட அனைத்தையும் வேதவாக்காக நம்பிய மக்களிடம் இது எடுபட்டிருக்கலாம். குர்ஆன் தமிழில் மொழிபெயர்க்கப்பட்ட இன்றைய காலகட்டத்தில் நபிமொழிகள் தமிழில் வெளிவரத் துவங்கிவிட்ட காலகட்டத்தில் இதை யாரேனும் ஏற்க முடியுமா?

مَازَالَ نُوْرُ مُحَمَّدٍ مُتَنَقِّلاً
فِى الطَّيِّبِيْنَ الطَّاهِرِيْنَ ذَوِى الْعُلاَ
حَتَّى لِعَبْدِ اللهِ جَاءَ مُطَهَّرًا
وَبِوَجْهِ آمِنَةٍ بَدَا مُتَهَلِّلاً

ஸுப்ஹான மவ்லூதில் இடம்பெறும் கொசுறுக் கவிதை இது. முஹம்மது(ஸல்) அவர்களின் ஜோதி உள்ளும் புறமும் தூயவர்களான உயர்ந்தவர்களிடையே

மாறிமாறி இடம்பெற்று வந்து முடிவில் அப்துல்லாஹ்விடம் வந்து சேர்ந்தது. அதன் பின் ஆமினாவின் முகத்தில் பிரகாசமாய் வந்தடைந்தது.

என்பது இதன் பொருள்.

உள்ளும் புறமும் தூய்மையானவர்கள் என்றால் நேர்வழி சென்ற மக்கள் என்று பொருள். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் இப்ராஹீம் நபியின் பரம்பரையில் தோன்றியவர்கள். இது அனைவரும் ஏற்றுக் கொண்டதும், ஆதாரப்பூர்வமானதுமாகும். இப்ராஹீம் (அலை அவர்களின் தந்தை ஆஸர் ஆவார். நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்கு இப்ராஹீம் (அலை மூதாதை என்றால் ஆஸரும் அவர்களின் மூதாதையே.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் ஜோதி ஆஸரிடமிருந்து தான் இப்ராஹீம் நபிக்கும் இடம் பெயர்ந்திருக்க முடியும். அந்த ஆஸர் பற்றி அல்லாஹ் கூறுவதைப் பாருங்கள்!

சிலைகளைக் கடவுள்களாக நீர் கற்பனை செய்கிறீரா? உம்மையும், உமது சமூகத்தையும் தெளிவான வழி கேட்டில் இருப்பதாகவே நான் கருதுகிறேன் என்று இப்ராஹீம் தம் தந்தை ஆஸரிடம் கூறியதை நினைவூட்டுவீராக!

(அல்குர்ஆன் 6:74)

இப்ராஹீம் தம் தந்தைக்காக பாவ மன்னிப்புத் தேடியது, தந்தைக்கு அவர் அளித்த வாக்குறுதியின் காரணமாகவே. அவர் அல்லாஹ்வின் எதிரி என்பது அவருக்குத் தெரிந்த பின் அதிலிருந்து விலகிக் கொண்டார். இப்ராஹீம் பணிவுள்ளவர்; சகிப்புத் தன்மை உள்ளவர்.

(அல்குர்ஆன் 9:114)

ஆஸர் சிலை வணக்கத்தில் ஊறிப்போனவர். பல தெய்வங்களை நம்பியவர். அல்லாஹ்வின் எதிரி என்றெல்லாம் இறைவன் தெளிவாகக் கூறுகிறான். இந்த மவ்லூது வரி அவர் உள்ளும் புறமும் தூய்மையான நல்லவர் என்று சான்று அளிக்கின்றது. குர்ஆனை நம்பக் கூடியவர்கள் இந்த மவ்லூதை நம்ப முடியுமா?

ஒரு நபித்தோழர் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் வந்து என் தந்தை எங்கே இருக்கிறார் என்று கேட்டார். நரகத்தில் என்று நபிகள் நாயகம் (ஸல்) கூறினார்கள். இதைக் கேட்டு அழுது கொண்டே அவர் திரும்பிச் சென்றார். அவரைத் திரும்பவும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அழைத்து என் தந்தையும் உன் தந்தையும் நரகத்தில் தான் உள்ளனர் என்று கூறினார்கள்.

அறிவிப்பவர்: அனஸ் (ரலி)

நூல்: முஸ்லிம் 302

என் தாயாருக்காக பாவமன்னிப்புக் கேட்க என் இறைவனிடம் நான் அனுமதி கேட்டேன். இறைவன் மறுத்து விட்டான். அவர்களின் ஜியாரத்துக்கு அனுமதி கேட்டேன். அனுமதி வழங்கினான் என்பதும் நபிமொழி.

அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி)

நூல்: முஸ்லிம் 1622,1621

இணை கற்பிப்போர் நரகவாசிகள் என்பது தெரிந்த பின்னர், அவர்கள் நெருங்கிய உறவினரேயானாலும் அவர்களுக்காக பாவமன்னிப்புத் தேடுவது நம்பிக்கை கொண்டோருக்கும், இந்த நபிக்கும் (முஹம்மதுக்கும் தகாது.

(அல்குர்ஆன் 9:113)

இந்த ஆதாரப்பூர்வமான சான்றுகளுடன் இந்தக் கவிதை வரிகள் மோதவில்லையா? இந்தக் கவிதை வரியின் மீது நீங்கள் ஈமான் கொண்டால் இந்த ஹதீஸ்களையும், இந்த வசனங்களையும் என்ன செய்யப் போகிறீர்கள்?

முரண்பட்ட இரண்டு விஷயங்களில் ஏதாவது ஒன்றைத் தான் நம்ப முடியும். மவ்லூதை நம்பினால் குர்ஆனை மறுப்பதாகவே அர்த்தம்.

## அபத்தங்கள்

اَقْسَمْتُ فِى نَصْرِيْ بِكُمْ عَلَيْكُمُ

இந்த வரி ஸுப்ஹான மவ்லூதில் யாமுஸ்தபா என்று துவங்கும் பாடலில் இடம் பெற்றுள்ளது.

நீங்கள் எனக்கு உதவி செய்ய வேண்டும் என்று உங்கள் மீதே நான் சத்தியம் செய்கிறேன்

என்பது இந்த வரியின் பொருள்.

இது அறிவுக்குப் பொருந்தாத உளறலாக அமைந்திருப்பதுடன் இஸ்லாமியக் கொள்கைக்கு முரணாகவும் அமைந்துள்ளது.

ஒருவர், தாம் ஒரு காரியத்தைச் செய்வதாகவோ, அல்லது செய்வதில்லை என்றோ உறுதியாகக் கூறுவதற்குத் தான் சத்தியம் செய்யப்படுகின்றது.

நான் உனக்கு நூறு ரூபாய்கள் தருவேன் என்று சத்தியம் செய்கிறேன் என்று ஒருவர் கூறினால் அதை நமது அறிவு ஒப்புக் கொள்கிறது.

நீ எனக்கு நூறு ரூபாய்கள் தர வேண்டும் என்று நான் சத்தியம் செய்கிறேன் என்று ஒருவர் கூறினால் அதற்கு எந்த அர்த்தமும் இல்லை.

ஏனெனில் ஒருவர், இன்னொருவர் செய்யும் காரியத்துக்காக சத்தியம் செய்ய முடியாது.

நபியே! நீங்கள் எனக்கு உதவ வேண்டும் என்று நான் சத்தியம் செய்கிறேன் என்று கூறும் இந்தப் பாடல் வரியும் இது போன்ற உளறலாகத் தான் அமைந்துள்ளது. நீங்கள் எனக்கு உதவி செய்ய வேண்டும் என நான் சத்தியம் செய்கிறேன் என்று ஒருவர் கூறினால் நபிகள் நாயகம் (ஸல்) விஷயமாக முடிவெடுக்கும் அதிகாரத்தைத் தன் கையில் எடுத்துக் கொள்கிறார். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் சுயமாக முடிவெடுக்க இயலாதவர்கள் என்பது போன்றும் அவர்களை மற்றவர்கள் வற்புறுத்திக் கட்டாயப்படுத்தி முடிவெடுக்கச் செய்ய முடியும் என்பது போன்றும் அவர் கருதியவராவார்.

தாய் மகன், தந்தை மகள் போன்ற நெருக்கமான உறவு இருந்தால் இவ்வாறு சத்தியம் செய்வதை ஏற்கலாம்.

அல்லாஹ்வின் மீது சத்தியமாக நீங்கள் வர வேண்டும் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் மகள் சத்தியம் செய்ததை முன்னர் குறிப்பிட்டுள்ளோம். நபிகள் நாயகத்துக்கும் நமக்கும் இத்தகைய உறவுகள் ஏதும் இல்லை; மாறாக அவர்கள் நம் அனை வருக்கும் வழிகாட்டியாகவும், தலைவராகவும் உள்ளனர். எனக்காக நீங்கள் உதவ வேண்டும் என சத்தியம் செய்கிறேன் எனக் கூறுவது அந்தத் தலைமைத்துவத்தைக் கேலி செய்தாக உள்ளது.

முஸ்லிம்கள் மார்க்கம் அனுமதிக்கின்ற எந்த விஷயத்திற்குச் சத்தியம் செய்வதாக இருந்தாலும் அல்லாஹ்வின் மீது மட்டுமே சத்தியம் செய்ய வேண்டும். அல்லாஹ்வைத் தவிர எவர் மீதும் எதன் மீதும் சத்தியம் செய்வதை விட்டும் தடுக்கப்பட்டுள்ளனர்.

யாரேனும் சத்தியம் செய்வதாக இருந்தால் அல்லாஹ்வின் மீது சத்தியம் செய்யட்டும். அல்லது வாய்முடி இருக்கட்டும் என்பது நபிமொழி.

நூல்: புகாரி 2679, 3836, 6108, 6646, 7401..

யாரேனும் அல்லாஹ் அல்லாதவர்கள் மீது சத்தியம் செய்தால் அவர் அல்லாஹ்வுக்கு இணை வைத்துவிட்டார் என்பது நபிமொழி.

அறிவிப்பவர்: உமர் (ரலி), நூல்: திர்மிதீ 1455

ஒரு யூதர் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் வந்து நீங்கள் கஃபாவின் மீது சத்தியமாக எனக் கூறுகிறீர்கள். இதன் மூலம் இணை வைக்கிறீர்கள் என்று கூறினார். அதன் பின்னர் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கஃபாவின் இறைவன் மீது ஆணையாக என்று கூறுமாறு நபித்தோழர்களுக்குக் கட்டளையிட்டனர்.

அறிவிப்பவர்: ஹுதைலா (ரலி)

நூல்: நஸயீ 3713

அல்லாஹ்வைத் தவிர எவர் மீதும் எதன் மீதும் சத்தியம் செய்யக் கூடாது. அவ்வாறு செய்வது அல்லாஹ்வுக்கு இணைவைப்பதாகும் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறியதற்கு மாற்றமாக நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மீதே மவ்லூதைப் பாடியவர் சத்தியம் செய்கிறார். இது இந்த வரியில் உள்ள மற்றொரு தவறாகும்.

ضَاقَتْ بِيَ الاَسْبَابُ

فَجِئْتُ هَذَا الْبَابَ

اُقَبِّلُ الاَعْتَابَ

اَبْغِيْ رِضاَ الاَحْبَابَ

وَالسَّادَةِ الاَخْيَارِ

அல்லாஹு ஃகாலிகுனா என்று துவங்கும் பாடல் வரிகள் இவை!

இதன் பொருள் வருமாறு:

வாழ்க்கைச் சாதனங்கள் எனக்குச் சுருங்கிவிட்டன. எனவே இந்த வாசலுக்கு வந்துவிட்டேன். (உங்கள் அருகில் அடங்கியுள்ள அபூபக்ர் (ரலி), உமர் (ரலி ஆகிய தலைவர்கள் திருப்தியை எதிர்பார்த்து நிலைப்படிகளை முத்தமிடுகிறேன்.

வாழ்க்கை வசதிகள் குறைந்து விட்டால் அல்லாஹ்விடம் பிரார்த் தனை செய்யுமாறு அல்லாஹ்வும் அவனது தூதரும் கற்றுத் தந்ததற்கு மாற்றமாக நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், அபூபக்ர் (ரலி), உமர் (ரலி ஆகியோர் அடக்கப்பட்ட இடத்துக்குச் சென்று அவர்களின் திருப்தியைப் பெறுவதற்காக படிகளை முத்தமிடும் இந்தக் கலாச்சாரத்திற்கு இஸ்லாத்தில் அனுமதி உண்டா? நிச்சயமாக இல்லை.

நாங்கள் குஃப்ரிலிருந்து விடுபட்டுப் புதிதாக இஸ்லாத்தை ஏற்ற நிலையில் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுடன் ஹுனைனை நோக்கிச் சென்று கொண்டிருந்தோம். (வழியில் முஷ்ரிகீன்கள் தங்கி, தங்கள் ஆயுதங்களைத் தொங்கவிடும் இலந்தை மரம் ஒன்று இருந்தது. தாது அன்வாத் என அது குறிப்பிடப்பட்டது. நாங்கள் ஒரு இலந்தை மரத்தைக் கடந்த போது அல்லாஹ்வின் தூதரே! அவர்களுக்கு தாது

அன்வாத் இருப்பது போல் எங்களுக்கும் ஏற்படுத்துங்கள் என்று நாங்கள் கூறினோம். இதைக் கேட்ட நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அல்லாஹு அக்பர்! நிச்சயமாக இது அந்த வழி முறைகளில் உள்ளவையே. அவர்களுக்குப் பல தெய்வங்கள் இருப்பது போல் எங்களுக்கும் பல தெய்வங்களை ஏற்படுத்துங்கள் என்று மூஸா (அலை அவர்களிடம் அவர்களின் சமுதாயத்தவர் கேட்டது போல் கேட்கிறீர்கள். நிச்சயமாக நீங்கள் உங்களுக்கு முந்திய சமுதாயத்தின் வழியிலேயே செல்கிறீர்கள் என்று கூறினார்கள்.

அறிவிப்பவர்: அபூவாகித் அல்லைஸீ (ரலி)

நூல்: திர்மிதீ 2106

மரம், செடிகளை, மற்றுமுள்ள பொருட்களைப் புனிதமாகக் கருதுவது அவற்றைக் கடவுளாக்குவதற்குச் சமமானது எனவும் இது வழி கெட்ட முந்தைய சமுதாயத்தவரின் வழிமுறைகள் எனவும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கற்றுத் தந்திருக்க, அந்தப் போதனைக்கு மாற்றமாக நிலைப்படியை முத்தமிடும் கலாச்சாரத்தை மவ்லூதின் இந்த வரிகள் ஆதரிக்கின்றன.

வறுமையை விரட்டுவதற்காக நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் அடக்கத்தலத்தையும்,அங்குள்ள நிலைப்படிகளையும் முத்தமிடச் சொல்வதன் மூலம் இஸ்லாத்தில் பல தெய்வ வழிபாட்டு முறையைத் திணிக்க இந்த மவ்லூது முயல்வதை அறியலாம்.

**وَاَنْتَ حَقًّا غِيَاثُ الْخَلْقِ اَجْمَعِهِمْ**

உண்மையாகவே நீங்கள் அனைத்துப் படைப்பினங்களுக்கும் இரட்சகராக இருக்கிறீர்கள் என்ற வரியும்,

**لَهُ جَزِيْلُ الْهِبَاتِ مِنْهَا نَعِيْمُ الدَّوَامِ**

அவர்களுக்கு ஏராளமான அருட்கொடை வழங்குதல் உள்ளது. நிரந்தரமான அருட்கொடையும் அவற்றில் ஒன்றாகும் என்ற வரியும்

**فَرَوِّحُوْا رُوْحِيْ بِكَشْفِ الْكُرَبِ**

சிரமங்களை நீக்குவதன் மூலம் என் உயிருக்கு நீங்கள் சுகமளியுங்கள் என்ற வரியும்.

مَا لِيْ سِوَى حُبِّيْ لَدَيْكَ وَسِيْلَةٌ

فَامْنُنْ عَلَيَّ بِفَضْلِ جُوْدِكَ اَسْعِدِ

உங்கள் நேசத்தைத் தவிர என்னிடம் எந்தச் சமாதானமும் இல்லை. எனவே உங்கள் அதிகப்படியான வள்ளல் தன்மையில் எனக்கு வழங்குங்கள் என்னைப் பாக்கியவானாக ஆக்குங்கள் என்ற வரியும்.

இது போல் அமைந்துள்ள இன்னும் ஏராளமான வரிகளும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களை இறை நிலைக்கு உயர்த்தும் வகையில் அமைந்துள்ளன. இஸ்லாத்தை ஓரளவு விளங்கிய முஸ்லிம் கூட ஆதரிக்க முடியாத இந்தப் பாடல்களைத் தான் வணக்கம் என்று நாம் செய்து வருகிறோம்.

وَضَعَتْهُ آمِنَةٌ وَلَمْ يَشْعُرْ بِهَا

اَحَدٌ عَنْ عُيُوْنِ الْحُسَّدِ

பொறாமைக்காரர்களின் கண்களை விட்டும் மறைப்பதற்காக ஆமினா அவர்கள் யாருமே அறியாத வகையில் நபியவர் களைப் பெற்றெடுத்தார்கள் என்பது இந்த வரியின் பொருள்.

இதில் எத்தனை தவறுகள் உள்ளன என்று எண்ணிப் பார்ப்போம். இப்படி ஒரு நிகழ்ச்சி நடந்திருந்தால் இதை ஆமினா அவர்களோ, அல்லது அந்தக் காலத்தில் மக்காவில் வாழ்ந்தவர்களோ தான் அறிந்திருக்க முடியும். அவர்கள் வழியாகத் தான் அடுத்தடுத்த தலைமுறையினர் அறிந்து கொள்ள முடியும்.

இந்த நிகழ்ச்சியை அறிவிப்பவர் யார்? நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுடன் சம்பந்தப்பட்ட அனைத்துச் செய்திகளும் பதிவு செய்யப்பட்டுள்ள எந்த ஹதீஸ் நூலில் இடம் பெற்றுள்ளது? மவ்லூது அபிமானிகள் கூறுவார்களா? நிச்சயமாக கூற முடியாது. ஏனெனில் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் காலம் முதல் ஆயிரம் ஆண்டுகள் வரை எழுதப்பட்ட எந்த ஆதாரப்பூர்வமான நூலிலும் இது பதிவு செய்யப்படவில்லை. முன்னூறு ஆண்டுகளுக்கு முன் எழுதப்பட்ட இந்த

மவ்லூதுப் பாடலில் தான் இது இடம் பெற்றுள் ளது. ஆயிரம் ஆண்டுகளாக வாழ்ந்த எந்த மனிதரும் அறியாத வரலாற்று நிகழ்ச்சி ஒன்றை ஆயிரம் ஆண்டுகளுக்குப் பின்னர் வந்தவர் அறிய முடியும் என்பதை நமது அறிவு ஏற்றுக் கொள்ளுமா?

எந்தவித வரலாற்றுக் குறிப்பும் இல்லாமல் நபியவர்களைப் பற்றி எவர் வேண்டுமானாலும் எதை வேண்டுமானாலும் கூறுவதை இது ஊக்கப்படுத்தாதா? என்பதையும் நாம் சிந்திக்க வேண்டும். இதற்கு எந்த ஆதாரமும் கிடையாது என்பதே இதை மறுப்பதற்கு போதுமான காரணம் என்றாலும் வேறு சில காரணங்களும் கூட உள்ளன.

பொறாமைக்காரர்களின் கண்களை விட்டும் மறைப்பதற்காக எவருக்கும் தெரியாமல் ஆமினா பிரசவித்தார்கள் என்பது சாத்தியமானது அல்ல.

சமூகத்துடன் கலந்து வாழும் எந்தப் பெண்ணும் பிறரது உதவியின்றி பிரசவிக்க முடியாது. அவர்களுக்குத் துணையாகப் பலர் இருக்க வேண்டியது அவசியம். மேலும் பிரசவ வேதனை யினால் அலறும் போது மற்றவர்களுக்குத் தெரியாமலிருக்க முடியாது. நிறை மாதக் கர்ப்பிணியைக் குடும்பத்திலுள்ளவர்கள் ஒவ்வொரு நேரமும் கண்காணித்துக் கொண்டே இருப்பார்கள். இந்த நிலையில் எவரும் அறியாதவாறு பிரசவித்தார்கள் என்பது ஏற்க முடியாததாகும்.

பொறாமைக்காரர்களின் கண்களை விட்டும் மறைப்பதற்காக இரகசியமாகப் பிரசவித்தார்கள் என்றால் பிரசவிக்கும் போது மட்டும் தான் பொறாமைக்காரர்களின் கண் படுமா? பிரசவித்து முடிந்த பின் குழந்தை தவழும் போதும், மழலை மொழி பேசும் போதும், குறும்புகள் செய்யும் போதும், இன்னும் பல கட்டங்களிலும் கூட பொறாமைக்காரர்களின் கண் படுமே! பொறாமைக்காரர்களின் கண் படக் கூடாது என்பதற்காக யாருமில்லாத காட்டுக்குக் குழந்தையுடன் சென்று அங்கேயே வசித்தார்கள் என்று கதை எழுதப் போகிறார்களா?

இது உண்மை என வைத்துக் கொண்டால் கூட இதில் சிறப்பு என்ன இருக்கிறது?யாருடைய கண்ணும் படக் கூடாது என்று கருதி ஒரு பெண் காட்டுக்குச் சென்று பிரசவித்தால் அந்தக் குழந்தை சிறந்த குழந்தை என்று ஆகிவிடுமா? எத்தனையோ காட்டுவாசிகள் யாருடைய துணையுமின்றி பிரசவிக்கும் நிலைமையைச் சந்திக்கிறார்கள். இதனால் அந்தக் குழந்தைகள் பிறப்பால் சிறந்தவர்கள் என்று ஆகிவிட முடியுமா?

இது பொய்யாக இருப்பதுடன் புகழ் சேர்ப்பதாகவும் இல்லை என்பதை மவ்லூது அபிமானிகள் உணர வேண்டும்.

وَاَتَتْ مَلاَئِكَةُ السَّمَاءِ تَزُوْرُهُ

وَتَنَالُ مِنْ رُؤْيَاهُ اَشْرَفَ مَقْصَدِ

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் பிறந்தவுடன் வானுலக மலக்குகள் அவர்களைச் சந்திக்க வந்தனர். அவர்களைப் பார்த்து தங்களின் உயர்ந்த இலட்சியத்தை அடைந்தனர் என்பது இதன் பொருள்.

جَاؤُوْ بِاِبْرِيْقٍ وَطَشْتٍ رُصِّعَتْ

جَنَبَاتُهُ مِنْ لُؤْلُؤٍ وَزَبَرْجَدِ

ஓரங்களில் முத்தும் மரகதமும் பதிக்கப்பட்ட கூஜாவையும், கோப்பையையும் அந்த மலக்குகள் கொண்டு வந்தனர்.

غَسَلُوْا جِلاَهُ وَخَتَّمُوْهُ بِخَاتَمٍ

تَمَّتْ بِرُؤْيَتِهِ نُبُوَّةُ اَحْمَدِ

அவர்களது மேனியைக் கழுவி அவர்கள் மீது முத்திரையிட்டார்கள். அதைக் காண்பதன் மூலம் அஹ்மதின் நபித்துவம் முழுமை பெற்றது.

இந்த மூன்று வரிகளிலும் மலக்குகள் சம்பந்தப்பட்ட விஷயங் கள் கூறப்படுகின்றன. நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் பிறந்த போது எல்லா மலக்குகளும் வந்தார்கள் என்பது சரி தானா?

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் பிறந்த போது மலக்குகள் வந்திருந்தால் அவர்களை அம்மக்கள் பார்த்திருக்க முடியாது. எனவே மலக்குகள் அனைவரும்

நபியவர்களைத் தரிசிக்க வந்தனர் என்பது உண்மையானால் அதை அல்லாஹ் கூறியிருக்க வேண்டும். அல்லது அவனது தூதர் கூறியிருக்க வேண்டும். இவ்விரண்டைத் தவிர வேறு எந்த வழியிலும் இதை அறிய முடியாது.

இதை அல்லாஹ்வோ, அவனது தூதரோ கூறியிருந்தால் அதற்கான ஆதாரங்களை மவ்லூது அபிமானிகள் எடுத்துக் காட்டுவார்களா? ஒருக்காலும் காட்ட முடியாது.

ஒரு கவிஞனின் கற்பனையைத் தவிர இதற்கு எந்த ஆதாரமும் கிடையாது. இன்னும் வேடிக்கையைக் கேளுங்கள்.

نَادَاهُمُ الرَّحْمَانُ اَنْ طُوْفُوْا بِهِ
بِالْعَرْشِ مَعَ دَارِ النَّعِيْمِ الاَرْغَدِ
ثُمَّ اعْرِضُوْهُ عَلَى الْخَلاَئِقِ كُلِّهَا
مِنْ كُلِّ رُوْحَانٍ وَكُلِّ مُجَسَّدِ

இறைவன் மலக்குகளை அழைத்து இந்தக் குழந்தைக்கு அர்ஷையும் சொர்க்கத்தையும் சுற்றிக் காண்பியுங்கள்! உயிருள்ள, உடலுள்ள எல்லாப் படைப்பினங்களுக்கும் இந்தக் குழந்தையைக் காட்டி வாருங்கள்! என்று கூறினான்.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் பிறந்த உடன் அவர்கள் சொர்க்கத்துக்கும், அர்ஷுக்கும் கொண்டு செல்லப்பட்டார்கள். அகில உலகுக்கும் கொண்டு செல்லப்பட்டு காட்டப்பட்டார்கள். இறைவனே இவ்வாறு கட்டளையிட்டான் என்று இங்கே கூறப்படுகிறது.

சிறு குழந்தையாக இருந்த நபியவர்களுக்கு இது காட்டப்படுவதில் என்ன பயன்? அவர்கள் பிறக்கும் போதே அனைத்தையும் அறிந்து கொண்டார்கள் என்று நிலைநாட்டுவது தான் இவர்களின் நோக்கம்.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் நபியாக ஆக்கப்பட்ட உடன் தாம் நபியாக ஆக்கப்பட்டதை அவர்கள் உணரவில்லை. அஞ்சி நடுங்கினார்கள். தமக்கு ஏதோ நேர்ந்து விட்டதாக எண்ணிக் கலங்கினார்கள். அன்னை கதீஜா (ரலி அவர்கள்

ஆறுதல் கூறித் தேற்றினார்கள். வரகா பின் நவ்பல் (ரலி அவர்கள் நீங்கள் இறைத்தூதர் ஆகிவிட்டீர்கள் என்று நம்பிக்கையூட்டினார்கள்.

மிஃராஜ் பயணம் சென்ற போது அங்கே எடுத்துக்காட்டப்பட்ட சொர்க்கம் உள்ளிட்ட அனைத்தைப் பற்றியும் ஜிப்ரீலிடம் விசாரித்துத் தெரிந்தார்கள் என்று ஆதாரப்பூர்வமான ஹதீஸ்கள் கூறுகின்றன.

பிறந்த உடன் அவற்றையெல்லாம் அறிந்திருந்தால் பிறரிடம் கேட்டு அறியும் நிலை ஏற்பட்டிருக்காது. எவ்வித ஆதாரமுமின்றிக் கற்பனை செய்தவைகளை அல்லாஹ் கூறியதாக இட்டுக் கட்டியவர்களுக்கும், இதை ஆதரிக்கும் மவ்லவி மார்களுக்கும் இதைப் புனிதமாகக் கருதும் ஏமாந்த சமுதாயத்திற்கும் பின்வரும் வசனங்களை எச்சரிக்கையாக முன்வைக்கிறோம்.

இதன் பிறகும் அல்லாஹ்வின் மீது பொய்யை இட்டுக்கட்டியோர் தாம் அநீதி இழைத்தவர்கள்.

(அல்குர்ஆன் 3:94)

அல்லாஹ்வின் மீது பொய்யை இட்டுக் கட்டுபவனை விட அல்லது அவனது வசனங்களைப் பொய்யெனக் கருதுபவனை விட அநீதி இழைத்தவன் யார்? அநீதி இழைத்தோர் வெற்றி பெற மாட்டார்கள்.

(அல்குர்ஆன் 6:21)

அல்லாஹ்வின் பெயரால் பொய்யை இட்டுக் கட்டுபவன், எதுவுமே அவனுக்கு (இறைவனிடமிருந்து அறிவிக்கப்படாதிருந்தும் எனக்கு அறிவிக்கப்படுகிறது எனக் கூறுபவன், மற்றும் அல்லாஹ் அருளியதைப் போல் நானும் இறக்குவேன் என்று கூறுபவன் ஆகியோரை விட மிகவும் அநீதி இழைத்தவன் யார்? அநீதி இழைத்தோர் மரணத்தின் வேதனைகளில் இருக்கும் போது நீர் பார்ப்பீராயின் வானவர்கள் அவர்களை நோக்கித் தமது கை களை விரிப்பார்கள். உங்கள் உயிர்களை நீங்களே வெளியேற்றுங் கள்! அல்லாஹ்வின் பெயரால் உண்மையல்லாதவற்றை நீங்கள் கூறியதாலும், அவனது வசனங்களை நீங்கள் நிராகரித்ததாலும் இன்றைய தினம் இழிவு தரும் வேதனைக்கு உட்படுத்தப் படுகிறீர்கள்! (எனக் கூறுவார்கள்.

(அல்குர்ஆன் 6:93 )

அறிவின்றி மக்களை வழி கெடுப்பதற்காக அல்லாஹ்வின் பெயரால் பொய்யை இட்டுக்கட்டுவோரை விட மிகப் பெரிய அநீதி இழைத்தோர் யார்? அநீதி இழைத்த கூட்டத்திற்கு அல்லாஹ் நேர் வழி காட்ட மாட்டான்.

(அல்குர்ஆன் 6:144)

அல்லாஹ்வின் மீது பொய்யை இட்டுக் கட்டுபவனை விட அல்லது அவனது வசனங்களைப் பொய்யெனக் கருதுபவனை விட அநீதி இழைத்தவன் யார்? அநீதி இழைத்தோர் வெற்றி பெற மாட்டார்கள்.

(அல்குர்ஆன் 6:21 )

அல்லாஹ்வின் மீது பொய்யை இட்டுக் கட்டியவனை விட அல்லது அவனது வசனங்களைப் பொய்யெனக் கருதியவனை விட மிகப் பெரிய அநீதி இழைத்தவன் யார்?குற்றவாளிகள் வெற்றி பெற மாட்டார்கள்.

(அல்குர்ஆன் 10:17)

இதோ எங்கள் சமுதாயத்தினர் அல்லாஹ்வையன்றி வேறு தெய்வங்களை ஏற்படுத்திக் கொண்டனர். அவற்றைப் பற்றி அவர்கள் தெளிவான சான்றைக் கொண்டு வர வேண்டாமா?அல்லாஹ்வின் மீது பொய்யை இட்டுக்கட்டியவனை விட மிகப் பெரும் அநீதி இழைத்தவன் யார்?

(அல்குர்ஆன் 18:15)

அல்லாஹ்வின் மீது பொய்யை இட்டுக்கட்டுபவன் அல்லது அவனிடம் வந்த உண்மையை பொய்யெனக் கருதிய வன் ஆகியோரை விட அநீதி இழைத்தவன் யார்? (ஏக இறைவனை மறுப்போருக்கு நரகத்தில் தங்குமிடம் இல்லையா?

(அல்குர்ஆன் 29:68)

இஸ்லாத்திற்கு அழைக்கப்படும் நிலையில் அல்லாஹ்வின் மீது பொய்யை இட்டுக் கட்டுபவனை விட மிகப் பெரிய அநீதி இழைப்பவன் யார்? அநீதி இழைக்கும் கூட்டத்திற்கு அல்லாஹ் நேர் வழி காட்ட மாட்டான்.

(அல்குர்ஆன் 61:7)

ஆகிய வசனங்களும் அல்லாஹ்வின் பெயரால் இட்டுக்கட்டுபவர்களுக்குக் கடும் எச்சரிக்கையாக அமைந்துள்ளன.

அது போல் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களைச் சம்பந்தப்படுத்தி இட்டுக்கட்டுபவர்கள் நரகத்தில் தங்கள் இடத்தை முன்பதிவு செய்யட்டும் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறியதாக பல நபிமொழிகள் உள்ளன.

புகாரி 106, 107, 110, 1291, 3461, 6197

அல்லாஹ்வையும், அவனது தூதரையும், வானவர்களையும் சம்பந்தப்படுத்தி இட்டுக்கட்டப்பட்ட இந்தக் கதையைப் படிப்பது பாவமா? புண்ணியமா? என்பதை மவ்லூது பக்தர்கள் சிந்திக்கட்டும்!

நன்மை என்று எண்ணிக் கொண்டு நரகத்திற்கு இழுத்துச் செல்லும் இந்த மவ்லூதுப் பாடலை உண்மை முஸ்லிம்கள் ஆதரிக்கலாமா?

ஸுப்ஹான மவ்லூதில் குர்ஆன், ஹதீஸுக்கு முரண்பட்ட போதனைகளும், பொய்களும் கூறப்பட்டுள்ளதால் தான் இந்த மவ்லூதை நாம் மறுக்கிறோம்.

இன்னொரு முக்கியமான விஷயத்தை சமுதாயத்திற்கு நினைவூட்ட நாம் கடமைப்பட்டுள்ளோம். நபிகள் நாயகம் (ஸல்) அவர்களைப் புகழ்வதற்காகத் தான் ஸுப்ஹான மவ்லூது இயற்றப்பட்டது என்று மவ்லூது ஆதரவாளர்கள் கூறுகின்றனர்.

நபியவர்களின் நேர்மை, நாணயத்தைப் புகழலாம்! அவர்களின் கூரிய அறிவைப் புகழலாம்.

அவர்களின் வீரத்தைப் புகழலாம், தன்னலமற்ற அவர்களின் தியாகத்தையும் சேவையையும் புகழலாம்.

அவர்களின் எளிமையான வாழ்வையும் அடக்கத்தையும் பணிவையும் புகழலாம். பொறுமையைப் புகழலாம்.

மவ்லூதுப் பாடல்களில் இத்தகைய புகழ்ச்சி எதனையும் காண முடியாது. பிறர் பின்பற்றத்தக்க இந்த நற்பண்புகளைக் கூறிப் புகழ்ந்தால் அதைக் கேட்கும் மக்கள் புகழ்பவரிடம் அந்தப் பண்புகள் சிறிதளவாவது இருக்க வேண்டும் என்று எதிர்பார்ப்பார்கள். நபியவர்களின் வாழ்வை ஓரளவாவது பின்பற்றக் கூடியவர்கள் மட்டுமே இது போன்ற பண்புகளைக் கூறிப் புகழத் தகுதி படைத்தவர்கள்.

இந்தத் தகுதிகள் சிறிதளவும் இல்லாத வீணர்கள், பின்பற்ற முடியாத விஷயங்களைப் புகழ் என்று அறிமுகம் செய்தனர். இதனால் தான் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் பிறக்கும் போது கத்னா செய்யப்பட்டிருந்தார்கள்; அவர்கள், வயிற்றைக் கிழித்துப் பிறந்தார்கள்;அவர்களின் பாதம் தரையில் படாது; அவர்கள் மீது வெயில் படாது; அவர்களின் மலஜலம் பரிசுத்தமானது என்றெல்லாம் பொய்களைக் கூறிப் புகழலானார்கள். இதைக் கூறுவதால் கூறக்கூடியவரிடமே இவை இருக்க வேண்டும் என எவரும் எதிர்பார்க்க மாட்டார்கள் அல்லவா?

அது போல் அல்லாஹ்வுக்குரிய தகுதிகள் நபியவர்களுக்கு இருப்பதாக இட்டுக்கட்டியதும் இதே காரணத்துக்காகத் தான். மலைப்பை ஏற்படுத்துவதும் அதன் மூலம் ஆதாயம் பெறுவதுமே இவர்களின் நோக்கமாக இருந்ததால் தான் இந்த இரண்டு வகைகளில் புகழ்ந்தார்கள். எந்த மவ்லூதுப் பாடலிலும் இந்த இரண்டு வகையான புகழ்ச்சி மட்டுமே இருப்பதை நாம் காணலாம். பிறர் பின்பற்றத்தக்க அவர்களின் தூய வாழ்க்கையைப் பற்றி எந்தப் புகழ்ச்சியையும் மவ்லூதில் காண முடியாது. இதிலிருந்து மவ்லூது பாடியவர்களின் உள்நோக்கத்தை நாம் அறியலாம்.

திருக்குர்ஆனுக்கும், நபிவழிக்கும் முரண்பட்டுள்ள மோசமான விளைவுகளை ஏற்படுத்தியுள்ள இந்த மவ்லிதிலிருந்து விடுபடுவோம். உண்மை இஸ்லாத்தை நிலைநாட்டுவோம்.